# சிவாஜி

ஞாயிறு வெளியீடு

SHIVAJI
TAMIL WEEKLY
28th year
of Publication
★
23—9—1962

அரசியல், தொழில் வள, சமுதாய நல, கலை, இலக்கிய வார இதழ் ♦ ஆசிரியர்: திருலோகசீதாராம்


# முன்னணித் தலைவர் மொரார்ஜி



## நமது நாட்டின் தலை சிறந்த ராஜதந்திரிகளில் ஒருவர் திக்விஜயம் செய்து தேடிப் பெற்று வந்த டாலர் உதவிகள்.

### மொரார்ஜி தேசாயின் வரலாறு.

★

அறுபத்தாறு ஆண்டுகள் நிரம்பிய மத்திய அரசாங்க நிதி அமைச்சர் மொரார்ஜி தேசாய் அண்மையில் மேல் நாடுகளைச் சுற்றிவிட்டுப் புது டில்லி திரும்பினார். அவர் சென்ற காரியம் வெற்றியடைந்ததன் காரணத்தால் அவருடைய கௌரவம் முன்னிலும் பன்மடங்கு உயர்ந்தது. மேல் நாடுகளிலிருந்து இந்தியாவுக்குப் பொருளாதாரத் துறையில் உதவி நாடுவதற்காக இவர் அந்நாடுகளுக்கு விஜயம் செய்த சமயம் சூழ்நிலை சரியாக இல்லை. உதாரணமாக, இந்தியா கோவாவை மீட்க எடுத்துக் கொண்ட நடவடிக்கை, காஷ்மீர் பிரச்னை, ரஷ்யாவிலிருந்து எம்.ஐ. ஜி. விமானங்களைப் பெற இந்திய அரசாங்கம் வெளிப்படுத்திய தகவல் முதலியன, மேல் நாடுகளிலிருந்து உதவி பெறச் சகாயம் புரியவில்லை. இக்காரணத்தால் பிரதமர் நேரு தேசாயின் மேல் நாட்டு - விஜயத்திற்கு ஒரு பெருத்த அளவு முக்கியத்துவம் காட்டியிருந்தார். இத்திக்கில் பிரதமரும் ஏமாற்றம் அடையவில்லை. ஏனெனில் தேசாய் ஐரோப்பியத் தலைவர்களைச் சுற்றி வந்து, தன்னுடைய விசேஷ இராஜதந்திர குணங்களைப்பிரயோகித்து, மூன்றுவது ஐந்தாண்டு திட்டத்தில் குறைவு படும், மொத்த தொகையாகிய 2200 லக்ஷம் டாலர்களை (சற்றேறக் குறைய) சரிக்கட்டுவதற்கு அந்நாடுகளிலிருந்து பெற வாக்குறுதி பெற்றுக் கொண்டு நாடு திரும்பினார்.

மொரார்ஜி, 1896-ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் 29-ஆம் தேதி ஒரு நடுத்தர குடும்பத்தில்பிறந்தார். லீப் வருடத்தில் பிறந்த இவருடைய பிறந்த தினம் ஒவ்வொரு ஆண்டிலும் பிப்ரவரி மாதத்தில் 29ஆம் தேதி இல்லாததன் காரணத்தால் கொண்டாட இயலுவதில்லை. ஆகையால், இவர் இந்து பஞ்சாங்கத்தை யொட்டிய ஒரு தேதியையே பிறந்த நாளாக அனுசரிக்கிறார். பம்பாயில் வில்ஸன் கல்லூரியில் படித்துப் பட்டம் பெற்று 1917 ஆம் ஆண்டு இந்தியப் பாதுகாப்புப் படையில் இவர் சேர்ந்து கொண்டார். இராணுவத்தில் இவர் பங்கு கொண்ட விஷயம் மிகச் சிலரே அறிவர். பின்னர், இராணுவத்தை விட்டகன்று அரசாங்க நிர்வாகத்தில் இடம் பெற்று சுமார் ஒரு பனிரெண்டு வருட காலத்திற்கு உதவி கலெக்டராக பல மாவட்டங்களில் இவர் பணியாற்றினார். இக்கால அளவில் இவர் பெற்ற அநுபவம் பிற்காலத்தில் மிகுந்த அளவுக்குப் பயன் அளித்தது என்று இவர் அறிவிக்கிறார்.

1930 ஆம் ஆண்டு மகாத்மா காந்தி அடிகளின் காந்த சக்தியினால் இழுக்கப்பட்டு மொரார்ஜி வேலையை ராஜிநாமா செய்து விட்டு முழு மனதுடன் தேசீய இயக்கத்தில் குதித்தார். வேலையை இழந்ததனால் ஏற்பட்ட குடும்பப் பொருளாதார நிர்பந்தங்களை இவரது மனைவியார் மனச் சோர்வடையாமல் நிர்வகித்தார். 1930-லிருந்து 1934 வரை மூன்று தடவையும் பின்னர், 1942 லிருந்து 1945க்குள் ஒரு தடவையும் இவர் சிறை வாசம் செய்திருக்கிறார். 1931லிருந்து 1937 வரை குஜராத் மாநில காங்கிரஸ் குழுவின் காரிய தரிசியாகவும், 1931-லிருந்து அகில இந்திய காங்கிரஸ் குழுவின் ஓர் அங்கத்தினராகவும் இவர் செயலாற்றி, நிர்வாகக் கமிட்டியில் ஒரு முக்கிய இடத்தைப் பெற்றுவிட்டார். 1937ஆம் ஆண்டில் பொதுத் தேர்தலில் வெற்றி பெற்று பம்பாய் அரசாங்க மந்திரி மண்டலத்தில் இடமளிக்கப்பட்டு வரிவசூல், காடு இவ்விரு இலாகாக்களையும் இவர் பரிபாலித்து வந்தார். இரண்டு வருடங்கள் கழித்து, இரண்டாவது உலக மகாயுத்தத்தில் இந்தியா பங்கு கொள்ளக் கூடாது என்று காங்கிரஸ் துவக்கிய இயக்கத்தின் காரணத்தால் பதவியைத் துறந்து இவர் வெளிவந்தார். மீண்டும், 1946 ஆம் ஆண்டில் உள்துறை மந்திரியாக்கப்பட்டு நிர்வாகத்தில் பல மாறுதல்களை ஏற்படுத்தினார். நிர்வாகச் சீர் அமைப்பில் இவர் கவனம் முக்கியமாகச் சிறை இலாகாவில் செலுத்தப்பட்டது. மதுவிலக்கு சட்டத்தையும் இவர் அப்பொழுது அமுலுக்குக் கொண்டு வந்தார். 1952-ல் இவர் பிரதம மாகாண மந்திரிப்பதவியை வகிக்கலானார். அப்பதவியில் மாநிலம் பல துறைகளில் முன்னேற்றம்

(18-ம் பக்கம் பார்க்க)



**சின்னபாபு - பிரபாவதி திருமணம்**

★

திருச்சி ஜில்லா காங்கிரஸ் கமிட்டித் தலைவரும், ஸ்ரீ சிதம்பரவிலாஸ் மோட்டார் சர்வீஸ் உரிமையாளருமான திருவாளர் ஆர். கிருஷ்ணசாமி ரெட்டியார் அவர்களின் செல்வன் சின்னபாபு, B. A., B. L. க்கும் உப்பிலியபுரம் திருவாளர் நாகராஜ ரெட்டியார் அவர்களின் செல்வி பிரபாவதிக்கும் திருச்சி தில்லைநகர் ஆனந்தநிலையத்தில் சிறப்பாகத் திருமணம் நடைபெற்றது. முதலமைச்சர் காமராஜர், அமைச்சர் இராமையா மற்றும் பிரபலஸ்தர்களும், உறவினர் நண்பர்களும் திரளாக வந்திருந்து சிறப்பித்தனர். கவிஞர் திருலோகசீதாராம் அவர்கள் மணமக்களை வாழ்த்தித் தெலுங்கில் பாப்புனைந்தளித்தார். திருமுக கிருபானந்தவாரியார் வாழ்த்துரை வழங்கினார். ஜனாதிபதி விருதுபெற்ற இசையரசி, பட்டம்மாள் அவர்களின் இன்னிசை விருந்து அனைவரையும் மகிழ்வித்தது. கலைத் தேவியின் கொலுமண்டபம் போன்று அமைந்த மணமேடையும், மின்னொளி பூத்துக் குலுங்கிய திருமணப் பந்தரும் கண் கொள்ளாக் காட்சியாக இருந்தன. மணமக்களுக்கு நமது நல்லாசிகள்.

# படித்த பெண்களின் மனத்தைப் பற்றிய ஆராய்ச்சி

## இல்லறப் பொறுப்பேற்கும் எண்ணத்தில் ஏற்பட்டுள்ள பல மாற்றங்கள்

## ஆண்களைப் போல பலவித வேலைகளிலும் ஆரணங்குகளுக்கு ஆவல் மூண்டிருக்கிறது

கல்வி யறிவு பரவுவதன் ஒரு நேரடியான விளைவாக பாரத நாட்டில் பெண்கள் விடுதலைக்கு வலுவேற்படுவதைக்காண்கிறோம். பாரத நாடு உள்பட, உலகம் முழுவதிலுமே, பெண்கள் தம் வீட்டுக்கு வெளியே பல விதப் பொறுப்புக்களை மேற்கொண்டு வருகிறார்கள்.

இதனால் பெண்களின் மனப்பாங்கிலேயே அமைதியான புரட்சி ஒன்று நிகழ்ந்து கொண்டிருக்கிறது. தாம் வாழ்வில் என்ன பாகம் வகிக்க வேண்டும் என்பது பற்றியும், தாம் வழிவழியாக ஏற்று வந்திருக்கும்வீட்டரசிப் பொறுப்பு பற்றியுமே பெண்களுடைய கருத்துக்கள் தீவிரமாய் மாறி வருகின்றன.

ஆனால், இன்றைய இளம் பெண்கள் தாம் வீட்டுப் பொறுப்பேற்பது பற்றி என்ன நினைக்கிறார்கள்? பாரத நாட்டில் இதுபற்றி ஆராய்ச்சி ஏதும் இதுவரை நடக்கவில்லை. ஆனால் மேற்கு ஜெர்மனியில் ஹாம்பர்க் நகரத்தின் 'டைஸீட்' என்னும் பத்திரிகை இது சம்பந்தமாய்த் தகவல் சேகரித்த போது பல ருசிகரமான கருத்துக்கள் வெளிவந்தன.

இன்று வீட்டரசிப் பொறுப் பேற்றிருக்கும் தமது தாய்மார்களைப்போல தாமும் பொறுப்பேற்க வேண்டும் என்ற கருத்தை இளம் பெண்கள் ஒரேயடியாகத் தள்ளிவிடவில்லை என்று இந்த ஆராய்ச்சி மூலம் தெரிகிறது. தாய்மார்கள் குடும்பச் செலவுக்காக வேலை செய்து பணம் சம்பாதிக்கும் இடங்களில் இளம் பெண்களே வீட்டுப் பொறுப்பை வகிக்கிறார்கள் என்பதும் தெரிய வந்திருக்கிறது. விட்டரசிகளின் கண்யம், அந்தஸ்து ஆகியவை பற்றி இளம் பெண்களின் கருத்துக்கள் என்ன என்பதையும் தமக்குக் காலம் வரும்போது அவர்கள் வீட்டரசிப் பொறுப்பேற்க விரும்புகிறார்களா என்பதையும் அறிவது இந்த ஆராய்ச்சியின் நோக்கம்.

"சமையல் தெரிந்த பெண்களைத்தான் ஆண்கள் விரும்புவார்கள்" என்று ஒரு முதுமொழி உண்டு. ஒரு பெண், தான் வீட்டரசியாய்ப் பொறுப்பேற்கவே விரும்புவதாகக் கூறிவிட்டு, அதற்குக் காரணமாக இந்த முதுமொழியைச் சொன்னாள்! இன்னொரு பெண், தான் ரொம்பச் சோம்பேறியாதலால் வீட்டரசியாகாமல் பத்திரிகைத் தொழிலில் ஈடுபட விரும்புவதாகச் சொன்னாள்! 12 வயது முதல் 20 வயது வரையான பெண்களிடம் இந்தக் கேள்வியைக் கேட்ட போது அவர்கள் தாம் வாழ்க்கையில் வீட்டரசிப் பொறுப்பேற்பதுடன் வேறு ஏதாவது செய்யவும் விரும்புவதாகத் தெரிவித்தார்கள்.

இளமைத் துடிப்பில் அவர்கள் இப்படிச் சொன்னதில் விந்தையில்லை. 25 பெண்கள், தமக்கு வீட்டு நிர்வாகம் பற்றிய அறிவு தேவையில்லை என்று சொல்லிவிட்டார்கள்; "உணவு டின்களைத் திறக்கத் தெரிந்தால்போதுமே!" என்று அவர்கள் வாதித்தார்கள். கணவனோ மனைவியோ யாரானாலும் சரி, பூரா நேரத்தையும் வீட்டுக்காகவே செலவிடுவதென்றால் அது காலவிரயம் என்று அவர்கள் கருத்து வெளியிட்டார்கள். மற்றவர்கள் வேறுமாதிரி அபிப்பிராயம் தெரிவித்தார்கள்; நல்ல வீட்டரசியால்தான் குடும்ப வாழ்வில் சௌஜன்யத்தை நிலைநிறுத்த முடியும் என்றும், சாப்பாடு சரியாயிருந்தால்தான் கணவனின் அன்பு நீடிக்க முடியும் என்றும் அவர்கள் சொன்னார்கள். வீட்டை நிர்வகிப்பதுதான் பெண்களின் இயல்பான தொழில் என்று பல பெண்கள் கூறினார்கள்.

அவர்களில் பெரும்பாலோர் பதினாலு வயதுக்கும் பதினேழு வயதுக்கும் இடையிலுள்ளவர்கள்; அவர்களுக்குத் தமையன்களும், தமக்கைகளும் உண்டு. அந்தப் பெண்களின் தாயார்களில் கால்வாசிப் பேர் பணம் சம்பாதிப்பதற்காக வேலை பார்ப்பவர்கள்.

### பணம்தான் கஷ்டமான அம்சம்

ஆரம்பப் பள்ளிக்கூடப் பெண்களுக்குக்கூட வீட்டு வேலைகளில் பெரும்பாலானவை தெரியும் என்பது இந்த ஆராய்ச்சி மூலம் புலனாயிற்று.

அந்தப் பெண்கள், குடும்பம் பூராவுக்கும் வேண்டிய சாமான்களைத் தாமே வாங்கி வந்து விடுவார்கள். அவர்களுக்கு வீட்டை சுத்தம் செய்யத் தெரியும்; சமையல் செய்யத் தெரியும். குடும்ப வரவு செலவுகளைக் கூட தம்மால் நிர்வகிக்க முடியும் என்று பல பெண்கள் வற்புறுத்தினார்கள்.

ஆனால் பள்ளிக்கூடப் பெண்கள் தமக்கு பண விவகாரம் கொஞ்சம் கஷ்டமான அம்சம்தான் என்று ஒப்புக்கொண்டு விட்டார்கள்.

சட்டைகளுக்கு 'இஸ்த்ரீ' போடுவதும், குழந்தைகளைப் பார்த்துக் கொள்வதும் தான் மிகக் கடினமான பொறுப்புக்கள் என்று பல பெண்கள் கூறினார்கள். பேட்டிகண்ட பெண்களில் 70 சதவீகிதம் பேர், குடும்பம் பூராவுககும் பாத்திரம் விளக்கும் பொறுப்பை ஏற்று வந்தார்கள் என்பது தெரிந்தது.

ஸெகண்டரி பள்ளிக்கூட மாணவிகள் எல்லோருமே பொதுவாக ஒரே மாதிரி விடைகளையே தந்தார்கள்: "எங்களால் எல்லாம் செய்ய முடியும்; துணி துவைப்போம். சமையல் செய்வோம், குழந்தைகளைப் பார்த்துக் கொள்வோம். இன்னும் என்னவேண்டுமானாலும் செய்யத்தெரியும், " பள்ளிக்கூடத்திலேயே இவையெல்லாம் கற்றுக் கொடுக்கப்படுகின்றன என்பதுதான் இதற்குக் காரணமாயிருக்க வேண்டும் என்று தோன்றுகிறது.

ஞாயிற்றுக் கிழமையன்று நல்ல விருந்தாகத் தயார் செய்து போட்டால் குடும்பமே சந்தோஷப்படுகிறது. அப்படி ஏற்படும் சந்தோஷமே வீட்டரிசிக்கு ஒரு வெற்றியல்லவா? குடும்பம் பூராவையும் மகிழ்ச்சியில் ஆழ்த்துவதற்கு ஒப்பான மகிழ்ச்சி வேறுஎன்னஇருக்க முடியும்?

ஆனால் இந்தப் பெண்கள் உண்மையிலேயே வீட்டுப் பொறுப்பேற்க விரும்புகிறார்களா? "தையல் மெஷின், டைப் மெஷின், சைக்கிள் இவற்றில் எது வேண்டும்?" பெரும்பாலான பெண்கள் டைப் மெஷினையே எடுத்தார்கள் என்றால், பெண் மனம் எப்படி வேலை செய்கிறது என்பதை ஊகித்துக் கொள்ளலாம். *

### வீட்டரசிகளுக்கு சுயதேவை வசதி

மேற்கு ஜெர்மனியில் உணவுப் பொருள் விற்பனை ஸ்டோர்களில் சுயசேவை வசதிகள் அமைக்கும் முறை விரைவாக முன்னேறி வருகிறது. கொலோன் பட்டனத்தில் உள்ள சுய சேவை ஆராய்ச்சிக் கழகம் இது பற்றிய புள்ளி விவரங்களைச் சேகரித்து வெளியிட்டிருக்கிறது. சென்ற ஆண்டில் மதிடும புதிதாக 8,000 சுய சேவை ஸ்டோர்கள் ஆரம்பிக்கப் பட்டன என்றும, இதனால் இத்தகைய ஸ்டோர்களின எண்ணிக்கை 22,600 இலிருந்து 30,600 ஆக உயர்நதது என்றும் அந்தக் கழகம தெரிவிக்கிறது.

மேற்கு ஜெர்மனியில் இப்போது 1,800 மக்களுக்கு ஒரு சுய சேவை ஸ்டோர் வீதம் இநக்கிறது.



**வலங்கிமான் டி.மு.கோ.**
O. P. 30/62

1. T. P. M. ராமலிங்கம், 2. சின்னப்பொன்னு (Died after Pettwn) 3. அமிருதவல்லி, 4. மைனர் ரெத்தினசபாபதி, 5. மைனர் கஸ்தூரி —மனுதாரர்கள்

4. 5. மனுதார்களுக்கு தாயாரான 3வது அடுத்த சினேகிதி —மனுதாரி

இறந்த 2வது மனுதாரிக்கு 1,3 to 5 மனுதாரிகள் —வார்சுகள்

2to5 மனுதார்களுக்கு முதல் மனுதார் —பார் எஜெண்டு

ரெஸ்பாண்டெண்டு —Nil

ஷெ நம்பரில் கும்பகோணம் தாலுகா துயிலியில் ஸ்திரவாசமாக இருந்து இறந்துபோன T. P. முத்தையாப்பிள்ளைக்கு வரவேண்டிய மனுவில்கண்ட கடன்களை வசூலிக்கும்பொருட்டு தங்களுக்கு வார்சு சர்டிபிகேட்டு கொடுக்க வேண்டுமென்று மனுதார்களால் மனுக் கொடுக்கப்பட்டு 28-9-62ல் ஈரகை. ஆக்ஷேபனையுள்ளவர்கள் தெரிவித்துக் கொள்ளலாம். இல்லாவிடில் ஒருதலைப்பக்ஷமாக விசாரித்து முடிவு செய்யப்படும்.

1/5130/84 G. ராகவாச்சாரியார் அட்வகேட்

**குளித்தலை டி மு.கோ.**
S. C. 404/62

தி. தா. முத்தரசநல்லூர் ரெங்கசாமி முத்துராஜா மகன் பெருமாள் முத்துராஜா —வாதி

தி. தா. கமபரசம்பேட்டை ஆறுமுக மூப்பன் மகன் அங்க முத்து மூபபன் —2ம பிரதிவாதி

வாதி பிரதிவாதி வகையரு பேரில் புரோநோட்டுப்படி ரூ. 136-50 கிடைக்க தாவா செய்து 29-9-62ல் வாய்தா போடப்பட்டுள்ளது. பிரதிவாதி ஆஜராகி ஆக்ஷியை தெரிவிகாவிடில் எகஸ்பாரட்டியாக தீர்மானிக்கப்படும்.

கே. திருவேங்கடாச்சாரியார்
3/5134/88 வக்கீல்

**குளித்தலை டி. மு. கோ,**
S. C. 500/62

கு. தா. மைலாடி தஙகமுத்து பிள்ளை மகன் சிவானந்தம பிள்ளை —வாதி

லால்குடி டவுனில் இருக்கும சாமியாப்பிள்ளை மகன் பிசசைப் பிள்ளை —பிரதிவாதி

வாதி பிரதிவாதி பேரில் புரோநோட்டுப்படி ரூ. 93-50 கிடைக்க தாவா செய்து ஷெ தாவா 29.9.62ல் போடப்பட்டுள்ளது. பிரதிவாதி ஆஜராகி ஆக்ஷியை தெரிவிகாவிடில் எகஸ்பார்ட்டியாக தீர்மானிக்கப்படும.

கே. திருவேங்கடாசசாரியார்
4/5135/89 வக்கீல்



# தஞ்சையில் பாரதி விழா

தஞ்சை தேசீய சேவா சங்கத்தின் உறுப்பான வ. உ. சி. இலக்கிய மன்றத்தார் இவ்வாண்டு பெரும் சிறப்புடன் பாரதிக்கு விழா எடுத்துப் போற்றினர்கள். இளைஞர் இராமமூர்த்தியும், டி. என். ராமச்சந்திரனும் மற்றும் பல பாரதி அன்பர்களும் பாரதியின் தேசீயக் குரலைத் தஞ்சை மக்களுக்குச் செவியும் கருத்தும் உணர்ச்சிபெற, உவகை ஊற்றெடுக்க அன்று முழங்கச் செய்தார்கள்.

சென்ற ஞாயிற்றுக்கிழமை காலை தஞ்சை இராமநாதன் செட்டியார் மண்டபத்தில் கொத்தமங்கலம் சுப்பு அவர்கள் தலைமையில் நடைபெற்ற கவியரங்கில் பொற்காசுப்புலவர், சுரதா, புலவர் பாலசுந்தரம், சோமசுந்தரம் ஆகியோர் அரிய கவிதைகளைப் பாடிய போது, கலை வளம் செறிந்த தஞ்சைக் கலையன்பர்கள் கரக்கம்பம் சிரக்கம்பம் செய்து கவிதைப் பெருக்கில் ஒன்றித்திளைத்து உவகைக் கடலில் மிதந்தனர். இளைஞர் இராமச்சந்திரன் ஆங்கிலத்திலும் தமிழிலும் பாரதியின் புகழைக் கவிபாடி மகிழ்வித்தார்.

பின் மாலையில் சுவைமிக்கதொரு சொற்போர், பொருளாதார தத்துவ சாஸ்திரியும் சென்னை சட்டமன்ற உறுப்பினருமான அறிஞர். ப. நடராஜன் அவர்கள் தலைமையில் துவங்கியது. சரபோஜிக் கல்லூரித்தமிழ்த் துறைத் தலைவர் வெங்கடாசலம் அவர்களும் கவிஞர் திருலோகசீதாராம் அவர்களும் உத்தி பிரிந்து நின்று வாதிப் பிரதிவாதிகளாகச் சொற்போர் நிகழ்த்தினர். இவர்களைப் பின்பற்றிப் பல அன்பர்கள் வாதிட்டனர் பாரதி கண்ட பாரத சமுதாயம் ஒரு கனவே யென்றும், இல்லை அது ஒரு நனவே யென்றும் விவாதம் தீவிரமாக நடைபெற்றது. கூடியிருந்த சபையோரின் உணர்ச்சியும் உற்சாகமும் சொல்லத் தரமன்று. இருபாலும் சமத்காரமான கட்சி வாதங்களும் அறைகூவல்களும் எழுந்த போதெல்லாம் பொதுமக்களும் தங்கள் உணர்ச்சி வழியே கட்சிகளில் பிரிந்து ஒன்றி ஆரவாரம் செய்து விவாதத்திற்கு உயிர்ப்பும் உணர்ச்சியும் ஊட்டினர்.

பாரதி கண்ட கனவு, பாரதசமுதாயம் எத்தகைய உன்னத நிலையை அடைய வேண்டு மென்று அவர் கவியுளத்தில் கொண்ட ஆசைகளே யென்றும், அவருடைய ஆசைகளை நிறைவேற்றுவதில் பாரத மக்கள் நெடுந்தூரம் வெற்றியடைந்திருக்கிறார்கள் என்றும், பாரத சமுதாயம் ஒரே குடும்பமென்ற அவரதுகனவு மெய்ப்பட மக்கள் ஒருமைப்பாட்டுணர்ச்சியைப் பெறவேண்டு மென்றும், இனம், மொழி, பழக்க வழக்கங்களால் நம்மில் வேறுபாடுகள் வளரக் கூடாது என்றும் அனைவரும் ஓர் குலம், அனைவரும் இந்திய மக்கள், பாரத சமுதாயம், உலகிற்குப் புதுமையான ஒரு பொதுவுடமைச் சமுதாயமாக அமைய ஒவ்வொருவரும் பாடுபடவேண்டும் மென்ற கருத்தை, உன் பாட்டு எதிர்மறைப் பாங்கில் வலியுறுத்திய விவாதம் மிகவும் சுவையுடையதாக அமைந்தது.

மாலை திலகர் திடலில் நடைபெற்ற பொதுக் கூட்டத்தில், கட்டுரை, பேச்சு, பாடல் போட்டிகளில் வெற்றி பெற்ற சிறுவர்கள், ஆசிரியர்களுக்கு, உக்கடை அப்பாவுத் தேவர் அவர்களால் பரிசுகள் வழங்கப் பெற்றன. மாபெரும் அந்தப் பொதுக் கூட்டத்தில் டாக்டர் விஜயலட்சுமி, டாக்டர் நடராஜன் மற்றும் பல அறிஞர்கள் தேசீய ஒருமைப்பாட்டை வற்புறுத்திப் பேசினர்.

இலக்கியக் கலை நிகழ்ச்சிகளில் கலந்துகொள்வதற்குப் பொற்காசு பெறும் ஆசிரியர் திருலோகசீதாராம் அவர்களுக்குப் பாரதி விழா அமைப்பாளர் இராமமூர்த்தி பொதுக் கூட்டத்தில் பொற்காசு வழங்கினர்.

பாரதியின் பெருமையை அவர் ஒரு தேசீய மகாகவி என்ற உண்மையைப் பிற மாநிலத்தவரும் உணர்ந்து போற்றச் செய்வது தேசீய ஒருமைப்பாட்டுக்கு உறுதுணை என்பதைப் பொற்காசுப்புலவர் விளக்கிச் சொற்பொழிவாற்றினர்.

★

## பாரதி விழா

*அகில இந்திய தமிழ் எழுத்தாளர் சங்கத்தின் யோசனைப்படி மகாகவி பாரதியின் 81-வது பிறந்த தினத்தை விமரிசையாகக் கொண்டாட தமிழ்நாடு சர்க்கார் தீர்மானித்திருக்கிறது.*

*வருகிற டிசம்பர் மாதத்தில் சில தினங்கள் நடத்தப்படவிருக்கும் இந்த விழா தேசிய ஒருமைப்பாட்டை அடிப்படையாகக் கொண்டதாக இருக்கும்.*

★

# கண்ணிழந்தவர்களுக்கு கல்வி

கண்ணிழந்தவர்களுக்கு கல்வி அளிப்பது பற்றிய சர்வதேச மகாநாடு சமீபத்தில் ஹனோவரில் நடைபெற்றது: உலகின் பல நாடுகளிலிருந்து 430 பிரதிநிதிகள் இதில் கலந்துக் கொண்டனர். அபிவிருத்தியடைந்த நாடுகளில் கண் இழந்தவர்களின் எண்ணிக்கை குறைந்து வருகிறதென்பது இம்மகாநாட்டில் அறிவிக்கப்பட்டது. மேற்கு ஜெர்மனியில் குருடர்கள் எண்ணிக்கை மிகவும் குறைந்துவிட்டது. கண்ணிழந்தவர்களுக்கு கல்வி போதிக்கும் பொறுப்பு கண்ணில்லாதவர்களிடையேதான் விடப்படவேண்டும் என்பது தவறுன கருத்து என்பதும் விளக்கப்பட்டது.

ஹனோவர் (டாட்) – சர்வதேச தொழிற் கண்காட்சிக்குப் பிரபலமான ஹனோவர் நகரம் சுமார் 13நாட்களுக்கு ஒரு சிறு ஐக்கிய நாட்டு ஸ்தாபனத் தலைமை ஸ்தலம் போல் விளங்கிற்று. கண்ணிழந்தவர்களுக்கு கல்வி அளிக்கும் சர்வதேச காங்கிரஸ் இங்கு நடைபெற்ற போதுதான் ஹனோவர் இம்மாதிரி காட்சியளித்தது. கண்ணிழந்தவர்களின் நலனுக்கான உலகக் கௌன்ஸிலின் ஆதரவில் இம்மகாநாடு நடைபெற்றது. ஐக்கிய நாட்டு ஸ்தாபனங்கள் அதன் துணை ஸ்தாபனங்களுக்கு குருடர்களுக்குக் கல்வி போதிக்கும் விஷயமாக இந்த ஸ்தாபனம் ஆலோசனைகள் அளித்து வருகிறது. உலகின் பல பாகங்களிலிருந்து 430 பிரதிநிதிகள் இம்மகாநாட்டிற்கு வந்திருந்தனர். செஞ்சிலுவை சங்க நர்ஸ்கள், இந்தியாவிலிருந்து ஸ்திரீ பிரதிநிதிகள், கிழக்கு ஆசியா, மத்திய கிழக்கு நாடுகளிலிருந்து பிரதிநிதிகள், இரு கிருஸ்துவ ஸ்தாபனங்களைச் சேர்ந்த பாதிரிகள் ஆகியோர் வந்திருந்தனர்.

இம்மகாநாட்டிற்கான ஏற்பாடுகளை எல்லாம் செய்தவர் ஹனோவரிலுள்ள கண்ணில்லாதார் நலன்களைக் காக்கும் ஸ்தாபனத்தின் தலைவரான டாக்டர் வின்டர் என்பவர். இந்த ஸ்தாபனத்தில் கண் இழந்த 180 மாணவர்கள் இருககிறுர்கள். திரு. வின்டர் தனது வரவேற்புரையில் ரத்தினச் சுருக்கமாக இப்பிரச்சினையை பற்றி கூறியதாவது: "அபிவிருத்தியடைந்துள்ள நாடுகளில் கண்ணில்லாதவர்களின் நலன்களுக்கு ஆக செய்துள்ள பல நல்ல காரியங்களை அபிவிருத்தியடையாத நாடுகளிலுள்ள இந்த அபாக்கியர்களுக்கு எப்படிச் செய்யப்போகிறேம் என்பதைப் பற்றி சிந்திக்கவேண்டியதே நம முன்புள்ள வேலையாகும்".

இம்மகாநாட்டில் கலந்து கொண்ட பிரதிநிதிகள் தங்கள் நாடுகளில் கண் இழந்தவர்களுக்கு கல்வி போதிப்பதில் ஏற்படும் அனுபவங்கள், கஷ்டங்கள் முதலியனவற்றை விவரித்தனர். இவர்களில் நான்கில் ஒரு பங்கினர் கண் இழந்தவர்களே.

அபிவிருத்தியடைந்துள்ள நாடுகளில் கண் இழந்தவர்களின் எண்ணிக்கை குறைந்துகொண்டு வருகிறது. 1870ம் ஆண்டில் ஜெர்மனியில் ஒவ்வொரு 1,00,000 பேர்களுக்கும் 90 குருடர்கள் இருந்தனர். ஆனல் இன்று 60 பேர்கள் தான் கண்ணிழந்தவர்கள் இருக்கின்றனர். இம்மாதிரியே ஐரோப்பிய நாடுகளில் குருடர்கள் எண்ணிக்கை குறைந்திருப்பதை புள்ளி விவரங்களிலிருந்து தெரிந்துக் கொள்ளலாம்.

விஞ்ஞான அறிவுவளர்ச்சி கண் வைத்திய நிபுணர்களின் அனுபவங்கள், அம்மை குத்திக்கொள்வது, பிரசவ முறைகளில் அனுசரிக்கப்படும் சுகாதார முறைகள் இவை காரணமாக கண் பார்வை இழப்பது மிகமிகக் குறைந்து விட்டது. ஆனல் தொழில் துறையிலும் போக்குவரத்துக்களிலும் ஏற்படும் விபத்துக்கள் காரணமாக கண் பார்வையை இழக்க நேர்ந்துள்ளது. இப்போது மக்கள் அதிக காலம் உயிர் வாழ்வது காரணமாக கண்பார்வை வயது காலத்தில் மங்கியும் வருகிறது.

ஆனல் தொழில் வளர்ச்சி காரணமாக குருடர்களுக்கும் அதிக வேலை வாய்ப்புகள் இருந்து வருகின்றன. முன்பெல்லாம் கண்ணிழந்தவர்கள் கூடை முடையும் வேலை மட்டுமே செய்து வந்தார்கள். ஆனல் இந்த நூற்றுண்டில் ஆரம்பத்தில் அவர்களுக்கு சுமார் 600 தொழில்களில் வேலை செய்யும் வாய்ப்பு ஏற்பட்டது. ஆனல் இன்று குருடர்கள் வேலைசெய்ய 1200 தொழில்கள் உள்ளன.

ஆசியா, ஆப்பிரிக்க நாடுகளில் ஒவ்வொரு 1,00,000 பேர்களுக்கும் சராசரி 400 பேர்கள் கண்ணிழந்தவர்களாக இருந்து வருகின்றனர். இந்நாடுகள் பலவற்றில் இவர்களின் நலன்களுக்கு திட்டம் போட்டு அரசாங்கம் எந்த உதவியையும் செய்ய முன்வர இல்லை. அமெரிக்காவிலோ அல்லது ஐரோப்பாவிலோ பயிற்சி பெற்று வர முடிந்த ஒரு சிலரே கண்ணிழந்தவர்களின் நலன்களுக்காகப் பாடுபட்டு வருகின்றனர். டாக்டர் வின்டர் இது பற்றியப் பேசுகையில் 'நாம் இவர்களுக்கு ஆதரவு அளித்தேயாக வேண்டும். கண்ணிழந்தவர்களுக்கு கல்வி போதிக்க கண்ணிழந்தவர்களையே தான் பயன்படுத்தவேண்டும் என்ற தவறை நாம் இதுவரை செய்து வந்திருக்கிறேம்.

அத்தவறை நாம் இனியும் செய்து வரல் ஆகாது என்று கூறினர். பொது சமூகத்திலிருந்து கண்ணில்லாதவர்களைத் தனியாக ஒதுக்கி வைக்கக் கூடாது என்றும் அவர்களை சமூகத்தில் சேர்ந்தவர்களாகச் செய்ய வேண்டும் என்றும் அவர் கூறினர்.

★

# பின்தங்கிய வகுப்பினருக்கு வீடுகள் புதிய அமைப்பில் கட்டப்படும்

*பின் தங்கிய வகுப்பினருக்கான ஜாகை வசதித் திட்டங்களை இதுவரை கிடைத்துள்ள அனுபவங்களை யொட்டி மாற்றியமைக்க உத்தேசிக்கப்பட்டிருக்கிறது.*

*யூனியன் உள்துறை மந்திராலயம் ராஜ்ய சர்க்காருக்கு எழுதிய கடிதமொன்றில் இந்தக் கருத்தை விளக்கியிருக்கிறது. இந்த வீடுகள் ஒரு குறிப்பிட்ட குறைந்த பட்சத்தாத்தில் குறிப்பிட்ட அளவுகளில் கட்டப்படவேண்டும்; இவை குறைந்தபட்சம் 20 ஆண்டுகளாவது நிலைத்திருக்க வேண்டும்; நியாயமான பராமரிப்பு வேலைகளையும் பழுதுபார்ப்பு வேலைகளையும் குடியிருப்பவர்களே செய்து கொள்ளவேண்டும்.*

*சாதாரணமாய் கிராமப் புறங்களில் ஒரு குடும்பத்துக்கு இரண்டு அறைகள், ஒரு சமையல் அறை, தாழ்வாரம், கக்கூசு, மாட்டுக் கொட்டில் அமைத்துக் கொள்வதற்கேற்ற கொஞ்சம் காலி மனை ஆகியவை தேவைப்படும். ஆனல், சர்க்காரின் நிதி வசதிகள் குறைவாக இருப்பதை முன்னிட்டு. ஒற்றை அறை வீடுகள் இதற்கு மிகவும் பொருத்தமாக இருக்கும் என்று சிபாரிசு செய்யப்பட்டிருக்கிறது.*

*கிராமப் புறங்களில் ஒற்றை அறை வீடுகள் கட்டுவதற்கு, வீடு ஒன்றுக்குச் சுமார் ரூ. 1,200 செலவாகும் என்று கணக்கிடப்பட்டிருக்கிறது.*

*இதில் 75 சதவிகிதம் தொகையை மத்திய சர்க்கார் மத்திய திட்டங்களின்கீழ் சகாயத் தொகையாக வழங்குவார்கள்; 50 சதவிகிதம் தொகை ராஜ்யத் திட்டங்களின்கீழ் வழங்கப்படும். இவை தவிர, தொழில் நுட்ப ஆலோசனை முதலியவை இலவசமாக அளிக்கப்படும்.*

*மீதித் தொகையை, வீட்டுச் சொந்தக்காரர்கள் ரொக்கமாகவும், கட்டட சாதனங்களாகவும், உழைப்பாகவும், போக்குவரத்து முதலிய ரூபத்திலும் கொடுத்தாக வேண்டும். விசேஷ சந்தர்ப்பங்களில், இதில் ஏற்படும் பற்றுக்குறையை ராஜ்ய சர்க்கார்கள் கடன் தொகைகளாகக் கொடுத்து உதவுவார்கள். இக்கடன் தொகைகள் சுலபமான தவணைகளில் திருப்பிக் கொடுக்கப்பட வேண்டும்.*

★




ஊன்றிய கொள்கையும் ஒன்றே கணந்தோறும்
தோன்றும் கடமைகள் ஆற்றுதல் நன்றே

ஒலி 27 | 23—9—1962 | வாரம் 45

## விஷ பயம்

ஓட்டலில் தோசை சாப்பிட்டவர் வாந்தியெடுத்தார். வீட்டில் செய்த ரவா. உப்புமாவைத் தின்றவர் இறந்து போனார். பஞ்சாயத்துக் குடிதண்ணீர்த் தொட்டியில் பிடித்த நீரைப் பருகியவர்கள் மயக்கமுற்று ஆஸ்பத்திரியில் கிடக்கிறார்கள். இப்படிச் செய்திகள் வெளியாவதைப் பார்த்தால் யாரும் கவலைப் படாமல் இருக்க இயலாது. இதில் உயிர் இழந்ததான தகவல்களும் இருக்கின்றன. எனவே விஷம் என்பது எதோ ஓட்டல் உணவில் மட்டும் தான் என்று நினைக்க முடியவில்லை. தப்பித்தவறி விஷ ஜந்துக்கள் இறந்து கிடந்த காரணம் என்றும் சொல்ல முடியவில்லை,

சுகாதாரக் குறைவு மட்டும் காரணமாக இருந்தால் இதை உடனே எப்படியும் கவனித்துச் சீராக்கிவிட முடியும். ஈரோடு ஓட்டல் சொந்தக்காரர்கள் தெரிவிக்கும் ஒருகருத்து கவனத்திற்குரியது. உணவுப் பொருள்களில் கலப்படம் செய்யும் அடிப்படை விஷமம் நடந்து வருகிறது. தானியக் கிடங்குகள், பலசரக்குக் கடைகள் போன்ற மூலஸ்தானங்களிலேயே அசுரகுணம் படைத்த இழிந்த பேராசைக் காரர்கள் சமூகத் துரோகம் நிறைந்த கலப்பட வேலையில் இறங்குகிறார்கள்.

இதற்குள் பருப்பில் கல்லையும் வெல்லத்தில் சாணத்தையும் கலந்து வெளிநாடுகளிலும் நமது பெருமைக்கு இழுக்குத் தேடிய பாதகங்களைப் பற்றிப் பத்திரிகைகளில் படித்திருக்கிறோம். உணவு விஷமாகிவிடும் அளவுக்கு இரக்க மற்ற கொடுஞ் செயலுக்கும் துணியும் சமூகத் துரோகிகளைக் கண்டு பிடித்துப் பகிரங்கமாகத் தண்டிக்கவேண்டும். கலப்பட மில்லாத வஸ்துவே இல்லை யென்ற அவலநிலை ஒரு நாட்டு மக்களின் நாகரிகத்துக்கும் பண்பாட்டுக்கும் ஏற்றதல்ல. நம்முடைய நாட்டில் சுத்தமான பாலும், தயிரும், வெண்ணெயும், நெய்யும் கிடையவே கிடையாது என்று சத்தியமே செய்யலாம். கூட்டுறவு முறையில் பால் விநியோகங்கள் ஓரளவுக்குச் சுத்தமாக நடைபெறக் கூடுமென்ற நம்பிக்கை கூடத் தளரும்படி இருக்கிறது.

உணவில் விஷம் என்ற செய்தி நாட்டில் ஒவ்வொருவரின் உள்ளத்திலும் கவலையை உண்டாக்கியிருக்கிறது. ஓட்டல்களை மட்டும் சோதிப்பது போதாது. உணவுப் பொருள்களை சந்தைக்கு ஏற்றி அனுப்பும் மூலஸ்தானங்களிலேயே கடுமையான கண்காணிப்பு அவசியமாகும். அரசாங்கம் இத் துறையில் தீவிரமான நடவடிக்கைகளைத் தாமதமின்றி மேற்கொள்ளவேண்டியது அவசரமும் அவசியமுமாகும்.

## தாய் மொழித் துணை

எண்ணமும் சொல்லும் இணைபிரியாதவை. உதடு அசையும் போது எண்ணம் சொல்லாக வெளிப்படும். சொன்ன ஒரு சொல்லைக் கேட்டதும் அது எண்ணமாக நம்முன் உருவெடுக்கும். இந்த இரண்டறக் கலந்த உணர்வு ஒருவனுக்குத் தனது தாய்மொழியில் தான் கிடைக்கும். வேற்று மொழியில் ஒன்றைக் கற்கும் போது, கற்க வேண்டிய பொருளை அணுகுவதற்கு முன்பு, வேற்று மொழியின சொற்களையும் பொருளையும் இலக்கணங்களையுமெல்லாம் ஒருவன் கடந்தாக வேண்டும். தாய்மொழியில் ஒன்றைப் பயிலும் போது, அறிவை ஒருவன் உடனே போய்த் தொட்டுவிட முடியும். தமிழ்நாட்டில் தமிழ்மக்கள், தங்கள் தாய்மொழியில் கல்வி கற்கச் செய்வதைப் போல எளிதான பயனுடைய படிப்பு வேறு மொழியின் மூலமாக எப்படிக் கிடைக்கும்? எனவே தமிழ் நாட்டில் தமிழ்ப் பிள்ளைக்குத் தமிழைத் தவிரப் பிற மொழி கல்வி மொழியாக இருக்க முடியாது. இருக்கக்கூடாது. இருக்க வேண்டுமென்பதற்கு எத்தனை நியாயங்கள் சொன்னாலும் அது அப்படிச் சொலபவர்களின் அன்னியமொழி அடிமைத்தனத்தைத்தான் காட்டும். என்று தணியு மிந்த அடிமையில் மோகம் என்று இவர்களைப் பார்த்துத் தான் பாரதி இரக்கப்பட்டார்.

கல்வித் துறையில் மொழியை ஒரு தடையாகக் கொணடு வந்து போட்டு குட்டை குழப்பும் இந்தப் பிரகஸ்பதிகளுக்கு எபபொழுது அறிவுத் தெளிவு வருமோ என்று இரங்கவேண்டியிருக்கிறது. கலைவாணி இவர்களுககுக் கண் திறந்து வைக்கவேண்டும். *

## கண்ணோட்டம்

—ரா. நா.

சென்னையில் கவியரசர் பாரதிவிழா மிகச் சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. பல்வேறு கூட்டங்களில் பேசிய பேச்சாளர்கள் வெளியிட்ட சில கருத்துக்கள் கவனத்திற்குறியன.

ம. பொ. சி. உட்பட பல தலைவர்கள் பாரதி விழாவை நாடெங்கும் குறிப்பாக பம்பாய், டெல்லி, கல்கத்தா முதலிய இடங்களில் கொண்டாட வேண்டும் என்று பேசினர். தாகுர் விழாவைச் சிறப்பாகக் கொண்டாடிய மாதிரி வங்க மக்கள் கொண்டாடவில்லை என்பது வருந்தத்தக்கது. ஆனால் பாரதியாரின் கவிச் சிறப்பைப் பிற மொழியினர் அறிந்து கொள்ள நாம் என்ன செய்தோம் என்பதைச் சிந்தித்துப் பார்க்க வேண்டும்.

மேலும் வட இந்தியா, மேற்கிந்தியா கிழக்கிந்தியா முதலிய பிராந்தியத் தலைநகர்களில் தமிழ்ச் சங்கங்களும் தமிழர் சங்கங்களும் இருக்கின்றன. மேலும் அகில இந்திய தமிழ் எழுத்தாளர் சங்கம் ஒன்று இருக்கிறது. இவைகளெல்லாம் ஒன்று கூடித் திட்டமிட்டு நாடெங்கும் பாரதிவிழா கொண்டாடுவதற்கான ஏற்பாடுகளைத் தீவிரமாக மேற்கொள்ள வேண்டும்.

அடுத்தபடியாக, பாரதியார் கடைசி காலத்தில் வசித்த திருவல்லிக்கேணி துளசிங்க பெருமாள் வீதியிலுள்ள வீட்டை அரசாங்கத்தார் வாங்கி அதை, கவியரசரின் நினைவுச் சின்னமாக நிறுவ வேண்டும் என்று திரு. ஆக்கூர் அனந்தாச்சாரியார் வாணிமகால் கூட்டத்தின் வரவேற்புரையில் கூறினார். இந்த விஷயத்தில் ராணிப்பேட்டை திரு. கே. ஆர். கல்யாணராமய்யர் வெளியிட்ட கருத்து வரவேற்கத் தக்கது. பாரதி சங்கமே பொது மக்களிடம் வசூல் செய்து அந்தப் புனித இல்லத்தை வாங்கி அதைப் பாரதி நூல் நிலையமாகவும், பாரதியார் கையெழுத்துப் பிரதிகள் உள்ள காட்சிசாலையாகவும் நிறுவ வேண்டும் என்பது தான் அக்கருத்து.

இதை உடனடியாகச் செய்ய சங்கம் முற்பட வேண்டும். பாரதி புகழ் பேசும் மக்களின் அந்தரங்க சுத்தியைச் சோதித்துப் பார்க்க இது நல்ல தருணம். இந்த முயற்சியைப பத்திரிகைகள் ஆதரித்து மக்கள் ஆதரவைத் திரட்டினால் கட்டாயம் பயன் கிட்டும் என்பதில் சந்தேகமில்லை.

இந்த சந்தர்ப்பத்தில் நடிகர் திலகம் திரு. சிவாஜி கணேசன் வெளியிட்டுள்ள அறிக்கை கவனத்திற்குரியது. பாரதியார் அமரரான தினத்தைக் கொண்டாடுவதை விட அவர் பிறந்த தினத்தை டிசம்பரில் கொண்டாடினால் நாளடைவில் அவரது நூற்றாண்டு விழாவைக்கொண்டாடஉதவியாயிருக்கும் என அவர் கூறினார். அண்ணல் காந்தியடிகளின் ஜயந்தி விழாவை, கண்ண பிரானின் ஜயந்தியைக் கொண்டாடுவதுபோல் பாரதி ஜயந்தியையும் கொண்டாடுவது தான் சிறந்தது.

சென்னை மகாஜன சபையில் ஆண்டுதோறும் பாரதி பாட்டுப் போட்டி நடைபெறும். பாட்டுப் போட்டியில் கலந்து கொள்ளும் சிறுவர் சிறுமியர் பாரதி கவிதைகளைப்பாட வேண்டிய உணர்ச்சியுடன் பாடுவதில்லை. ஆகையால் அவர்கள் இந்த ஆண்டு ஒரு பேச்சுப் போட்டி நடத்தினா. 'பாரதியும் காந்தியும்', 'பாரதியும் தேசியக் கல்வியும்' தமிழ் நாட்டின் முன்னேற்றம், 'காமராசரும சத்தியமூர்த்தியும்' என நான்கு தலைப்புகள் பற்றி பேச்சுப் போட்டி நடந்தது. இந்தப் போட்டியை மதிப்பிடும் நடுவலர்களில் ஒருவராகப்பணியாற்றும் வாய்பபும் பாக்கியமும் எனக்குக் கிடைத்தது.

சுமார் 70 சிறுவர் சிறுமியர் பங்கு கொண்டனர். நமது சிறுவர்களின் பேச்சுத் திறமை சிறப்பாக மிளிர்வது கண்டு மட்டற்ற மகிழ்ச்சி கொண்டேன். கருததுச் செறிவும், சொல்லழகும் பல சிறுவர்கள் நாக்களில் நர்த்தனமாடின. குறிப்பாக 'பாரதியும் காந்தியும்' என்றதலைப்பு பற்றிப்பேசிய ஒரு 6 வயதுச் சிறுவன் சென்னையில் அடிகளைக் கவியரசர் சந்தித்த சமபவத்தை சிறப்பாக இருவரும பேசுவது போல வர்ணித்தான். அடுத்தபடியாக 'பாரதியும் தேசியக் கல்வியும்' என்பது பற்றிப் பேசிய ஒரு 7 வயதுச் சிறுமி தேசியக் கல்வி பற்றி பரதியாரின் கருத்துக்களை அவரது கவிதைகள் மூலம் எடுத்துக் காட்டித் தயக்க மின்றிப் பேசியது எல்லோரையும் கவர்ந்தது. இந்தப் போட்டி மூலம் நான் அறிந்து கொண்டது இந்தத்தலைமுறை இளைஞர்கள் சிறப்பாக கலவ அறவு பெற்று வருகிறார்கள், தமிழகத்தின எதர்காலம் மிகச் சிறபபாக மலரும் என்பது தான்.

கோலாகலம், குதூகலம் பற்றிப் பேசிவிட்டு ஒரு கசப்பான விஷயததைப பற்றிக் குறிப்பிட வேண்டியதற்கு வருந்துகிறேன். பாரதி விழாக்களில் தி.மு.க. வினர் கலந்து கொள்ளாதது பற்றி, கல்வி அமைச்சர் திரு. பகதவத்ஸலம் பேசியிருக்க வேண்டாம் என்பதே என் தாழ்மையான அபிப்பிராயம. இந்தக் குற்றச் சாட்டிற்கு த.மு.க. வினர் கூறிய பதில சிறுபிள்ளைததனமாய் இருககிறது. 'விழாவிற்கு எங்களை யாரும் அழைக்கவில்லை எனபது தான் அவர்கள் கூறிய பதில்' பாரதியாரிடம் அவர்களுக்குப் பக்தி இருக்குமானல் அவ்ர்களே கூட்டம் கூட்டிக்கொண்டாடியிருக்கலாம். அதை யாரும் தடை செய்யவில்லை. தடை செய்திருக்க முடியாது. ஆனல் அவர்கள் கொண்டாடாததற்கு ஒரு காரணம் கூறலாம். அவர்கள் மேற்கொண்டுள்ள பல சீர்திருத்தங்களுக்குப் பாரதியார் கவிதைகளில் ஆதரவு இருந்தாலும் அவர் தேசிய ஒருமைப்பாட்டைப் பறைசாற்றிய கவிஞர். 'பாரதநாடு பழம்பெரும்நாடு போற்றுவோம் இஃதை எமக்கில்லை ஈடே' என்றும் 'எல்லோரும் ஓர் குலம், எல்லோரும் ஓர் இனம், நாம் எல்லோரும் இந்நாட்டு மன்னர்' என முரசு கொட்டிய கவியரசர் விழாவை ஆரியம் திராவிடம் என்று பிரித்துப் பேசும், துவேஷக் கட்சியினர் எப்படிக் கொண்டாட முடியும் ?

★

ஹோட்டல் உணவு உட்கொண்டு சில சிறுவர் தஞ்சை மாவட்டம் பாபநாசத்தில் இறந்தனர். சென்னையில் ஒரு ஹோட்டலில் சிற்றுண்டி சாப்பிட்ட பலர் நோய்வாய்ப்பட்டனர்கொத்தவால் சாவடிக்கருகில் உள்ள ஹோட்டலில் உணவருந்திய பெண்மனி இறந்துவிட்டாள். ஹோட்டல்கள் சுகாதாரமான முறையில் நடககின்றனவா, ஊசிப் போன பதார்த்தங்கள் வழங்கப்படுகின்றனவா, அங்கே வழங்கப்படும் குடிதண்ணீர் சுத்தமாக இருக்கின்றதா எனச்சுகாதாரிகள்கவனிக்க வேண்டும். சில காலமாக இரவு 10 மணி வரை கூட ஹோட்டல்களில் சிற்றுண்டி அருந்தும் வழக்கம் பரவி வருகிறது. மாலை அலுவலகங்களை விட்டுக் கிளமபுகிறவர்கள் ஹோட்டலில் சாப்பிடாமல் வீடு வருவதில்லை. பொருளாதார நிலை திருப்திகரமாயிலலை என்று குறை கூறவரும் இந்நாட்களில் ஹோட்டல் செலவு அதிகரித்து வருவது வருந்தத் தககது. வீட்டிலே சமைப்பதற்கு ஆளில்லாவிட்டால் தான் உண்வு விடுதியை அணுகவேண்டும் என்று யாவரும் ஒரு விதி செய்து கொணடு அதன்படி நடந்துவந்தால் ஹோட்டல்களும் ஒழுங்காக நடக்கும். கூட்டம அதிகரித்தால் கலப்படம் செய்து கிராக்கியைச் சமாளிப்பதனால்தான் இம் மாதிரி வபரீதங்கள் நடைபெறுகின்றன.

★

### ஆக்கூர் அனந்தாச்சாரியார் மணிவிழா

▶▶◀◀

**சிறந்ததேசத்தொண்டரும், பாரதி பக்தரும், எழுத்தாளருமாகிய திரு. ஆக்கூர் அனந்தாச்சாரியார் அவர்களின் மணிவிழா 27-9-62 வியாழன் அன்று மாலை 6-மணிக்கு சென்னை தியாகராய நகர் வாணி மஹாலில் நடைபெறும்.**




# புதிய சொற்கள்

ஒரு சமயம் பார்த்தால் சொற்களுக்கு நிறையப் புத்தி இருக்கிறதென்று தோன்றுகிறது. ஏன், புத்தி என்பதே சொற்களில் புகுத்தி அடைத்துள்ள குளிகைகள் என்றே மதிக்க வேண்டியிருக்கிறது. பிறிதொரு சமயம் இந்தச் சொற்களுக்குப் புத்தியே கிடையாது போலும் தெரிகிறது. ஒன்றையும் சரியாகச் சொல்லுகிற யோக்யதை இவற்றிற்கு இருப்பதில்லை.

இப்படித் தோற்றுவற்குக் காரணம் சொற்கள் தோன்றி வளர்ந்து மாயும் தன்மை கொண்டிருப்பது தான் போலும்.

சொற்கள் தோன்றுகின்றன. எண்ணங்களை ஒலிக் குறிப்பால் வெளியிட்டு, அந்த எண்ணத்தை மற்றவர் புரிந்து கொள்ளத் தொடங்கும் போது சொல் என்ற வடிவம் பிறக்கிறது. இவ்விருவரிடையே பரிமாறப் பட்ட எண்ணம் அந்தச் சொல்லின் பொருளாக அமைகிறது. ஒரு சொல் இப்படி அமைந்த ஒரு பொருளை அப்படியே தன்னிடம் கொண்டு நிலைத்திருக்குமென்று சொல்ல முடியவில்லை. தொடர்ந்து இந்தச் சொல்லை வழங்குகிறவர்கள் அந்தச் சொல்லின் பொருளைக் குறைத்து விடுகிறார்கள் அல்லது கூட்டி விடுகிறார்கள். சில சமயம் மாற்றியே விடுகிறார்கள். இந்த மாற்றங்கள் காலப் போக்கில் மனிதர்கள் சொல்லை உச்சரிக்கும் போது கொண்டிருக்கும் எண்ணத் திட்பத்தைப் பொறுத்து ஏற்படுகின்றன.

காமம் காதல் என்ற சொற்களின் வரலாற்றைப் பார்த்தால், காமம் என்பது நெஞ்சத்து நேயவுணர்வால் இரண்டுள்ளங்கள் தொடர்புற்று இரண்டறக்கலக்கின்ற மேலான இன்பப் பிணைப்பின் வேகத்தைக் குறிக்கும் ஒரு சொல்லாகஇருந்திருக்கிறது. காதல் என்ற சொல்லோ தனக்குரியதல்லாத ஒன்றை மோகமுற்றுத் தீய வழியில் பெற்று அனுபவிக்கும் ஒரு தித்திப்பென்ற பொருளில் தான் அக்காலத்தில் இருந்து வந்திருக்கிறது. இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட திருக்குறளின் மூன்று பெரும் பிரிவுகளில் காமத்துப் பால் என்பது ஒன்று. காதல் கவருடல், கள்ளுண்டல், பொய் மொழிதல், ஈதல் மறுத்தல் ஆகிய பாதகச் செயல்களில் ஒன்றாகக் 'காதல்' இருந்திருக்கிறது.

இந்த நாளில் இச் சொற்கள் நேர்மாறான பொருளைக் கொண்டிருக்கின்றன. காமம் என்பது இன்பமென்ற பொருள் கெட்டுப்போய், சதைப் பசி என்ற பொருளில் வழங்குகிறது. காதலோ தெய்விகமான இன்ப நிலைக்கு உயர்ந்து போய் விட்டது. இலக்கிய வழக்கிலேயே இந்த இடமாற்றத்தைப் பார்க்கிறோம்.

இப்பொழுதெல்லாம் நாற்றமென்ற சொல்லைக் கேட்டால் மூக்கைப் பிடித்துக் கொள்ளுகிறோம். உண்மையில் மணம்கமழ் — என்ற பொருளில் தான் பழைய பிரயோகங்களெல்லாம் இருக்கின்றன. இலக்கிய வழக்கில் நாற்றத்தைச் சகித்துக்கொண்டு நறுமணம் என்று பொருள் கொள்ள நாம் முயன்றாலும் நடைமுறைப் பேச்சில் இந்தச் சொல் நாற்றமெடுத்துப் போயிருப்பதைப் பார்க்கிறோம்.

ஆக, சொற்களுக்குத் தனித்த யோக்யதை ஒன்றும் கிடையாது. அதை உச்சரிக்கிறவர்கள், புரிந்து கொள்ளுகிறவர்களுடைய மனோபாவத்திற்கு ஏற்றவாறு சொற்களின் பொருள குறுகியும், விரிந்தும், திரிந்தும், மாய்ந்தும போகின்றன. எத்தனையோ சொற்கள் வழக்கொழிந்து போய் விட்டிருக்கின்றன. சில சொற்கள் இலக்கியச் சோலையில் மட்டும் உலவிவருகின்றன. வெளியிலே நடமாடும் திராணி இவற்றிற்குக் கிடையாது.

பாஷை என்பது முன்பே முடிவாகச் செப்பனிட்டு முடிந்துபோன காரியம் போலவும் இனிமேல் புதிதாக எந்தச் சொல்லையும் சேர்ப்பது ஆசாரக் குறைவென்றும் எண்ணுகிறார்களே, அந்த எண்ணம் எவ்வளவு பேதமையானது என்பதற்காகச் சொல்ல வந்தேன்.

புதிது புதிதாக நமக்கு வாழ்க்கையும், எண்ணமும் வளர்ச்சியும், பொருள்களும் சேரச் சேரப் புதுப் புதுச் சொற்கள் தோன்றிக் கொண்டுதான் இருக்கும். தோன்ற வேண்டும். வாழ்க்கையென்பது ஒரே வட்டத்தில் செக்கு மாடுபோல் வளைய வந்து கொண்டிருக்கும் காரியமாக இருந்து விட்டால் ஏற்கனவே இருக்கும் சொற்கள் போதும். வாழ்க்கை யப்படி யிருக்க வில்லை. மேலும் மேலும் அடிவைத்தும் புதுப் புது வழிகளில் நீண்டு நீண்டு தொடுவானை நோக்கிப் போய்க் கொண்டிருக்கும் நெடும் பயணம்.

கலைச் சொற்கள் நம்மிடம் மிகுதியும் இல்லை. வாழ்வில் கலைகள் வந்து பொருந்தினாலல்லவோ சொற்கள் உருவாகும். நம்முடைய சொந்தக் கலைகளாயிருந்தால் நமது சொந்தச் சொற்களும் பிறக்கும். கலைகளைப் பிறரிடமிருந்து கற்றுக் கொள்ளும் பொழுது அவற்றிற்குரிய சொற்களையும் நாம் ஏற்றுக் கொள்ளவேண்டியது தான். அது நமதுமொழியில் இல்லையே என்று தயங்கவும் நாணவும் வேண்டிய அவசியம் கிடையாது. எடுக்கும் போது அதன் கருத்தைப் புலப்படுத்தக் கூடிய சொற்பகுதிகள் நம்மிடம் இருந்தால் அவற்றை அடியாக வைத்து சொற்களை நாமே உற்பத்தி செய்து கொள்ளலாம். இல்லையென்றால் அப்படியே பிற சொற்களை ஏற்றுக் கொள்ளலாம். உச்சரிப்பைக் கூட ஏற்கலாம். ஏற்றுக் கொள்வதில் வைதீகம் பார்க்கக் கூடாது. *

# போதி மாதவம்



உலகெலாம் ஓர்பெருங்கன வி∴துளே
உண்டுறங்கி இடர்செய்து செத்திடும்
கலக மானிடப் பூச்சிகள் வாழ்க்கையோர்
கனவினும் கனவாகும் இதற்குநான்
பலநினைந்து வருந்தியிங் கென்பயன்?
பண்டு போனதை எண்ணியென் னுவது?
சிலதினங்கள் இருந்து மறைவதில்
சிந்தை செய்தெவன் செத்திடுவானடா!

— பாரதி.

# வைசூரி ஒழிப்பு இயக்கமும் பிரச்னைகளும்

இந்தியாவிலுள்ள பெரிய சுகாதாரப் பிரச்னைகளுள் வைசூரி நோயும் ஒன்றாகும். சென்ற நான்கு ஆண்டுகளில், உலகமுழுவதும் இந்நோயினால் பாதிக்கப்பட்டிருந்தவர்களின் எண்ணிக்கையும், இந்தியா, பாகிஸ்தானில் பாதிக்கப்பட்டிருந்தவர்களின் எண்ணிக்கையும் கீழே தரப்பட்டிருக்கின்றன.

| | மொத்த எண்ணிக்கை | இந்தியாவிலும் பாகிஸ்தானிலும் |
|---|---|---|
| 1958 | 2,45,978 | 2,20,713 |
| 1959 | 81,169 | 55,492 |
| 1960 | 58,271 | 33,950 |
| 1961 | 79,579 | 47,937 |

இந்தியாவிலும் பாகிஸ்தானிலும்தான் இந்நோயாளிகள் பெருமளவில் இறந்திருக்கின்றனர் என்பது புள்ளிவிவரங்கள் மூலமாகத் தெரியவருகிறது. ஆகவே நமது சுகாதாரப் பிரச்னைகளில் இது மிகவும் முக்கியமானதாகும்; இந்நோயை அறவே ஒழிக்க நடவடிக்கை எடுப்பதற்கு முதலிடமளிக்கப்பட வேண்டியது அவசியமாகும். அதை உத்தேசித்துத்தான் தேசிய வைசூரி ஒழிப்பு இயக்கத்தைத் தொடங்க நமது சர்க்காரும் முன்வந்திருக்கின்றனர்.

பொதுமக்கள் எல்லாருக்கும் அம்மைப்பால் குத்திவைத்து 1961-க்குள்ளாக இந்நோயை அடியோடு ஒழித்துள்ள பொலிவியா போன்ற நாடுகளின் முயற்சி நமக்கு ஊக்கமளிக்கிறது; பராகுவே, உருகுவே போன்ற நாடுகளும் கணிசமாக வெற்றியடைந்துள்ளன.

வைசூரி நோயை நாட்டிலிருந்தே அறவே ஒழித்து மேலும் தோன்றாமல் செய்வதுதான் இத்திட்டத்தின் நோக்கமாகும். மிகக் கொடிய தொற்றுநோயாகிய வைசூரி நோய், சாதாரண பூதக் கண்ணாடிக்குக் கூடப் புலப்படாத நுண்கிருமிகளால் பரப்பப்படுகிறது; அவை மனித உடல் அணுக்களில்தான் விருத்தியாகின்றன. இக்கிருமிகள் நோயுற்றவர்களிடமிருந்து புறப்பட்டுப் பிறரைப் பற்றிக் கொள்கின்றன.

ஆக்கிருமிகள், வைசூரி நோயாளிகள் இருமும்போதும், தும்மும்போதும், சிரிக்கும்போதும் வெளிப்படுகின்றன; நோய் குணமாகிவரும்போது புண்ணில் உலர்ந்து உதிருகிற பொருக்குகளின் மூலமாகவும் பரவுகின்றன. அவை படுக்கையிலும் தரையிலும் துணிகளிலும்விழுந்து தூளுடன் கலந்துவிடுகின்றன. அதே படுக்கையில் படுப்பவர்கள் அல்லது அறையில் தங்குகிறவர்கள் அக்காற்றை சுவாசிக்கின்றனர். இந்நுண்கிருமிகள் அறையின் சாதாரண தட்பவெப்ப நிலையில் நீண்ட நாட்கள் வாழக்கூடியனவாகையால், அறையைவிட்டு வியாதியஸ்தர் உபயோகித்த பொருள்கள் ஆடை, படுக்கை முதலியவை நோய்களைப் பரப்புகிற முக்கிய கருவிகளாக இருக்கின்றன.

வைசூரி நோய் பரவாமல் தடுப்பதற்குரிய நடவடிக்கைகளில், நோயாளி உபயோகித்த துணிமணிகள் முதலியவற்றிலுள்ள நுண்கிருமிகளை அழிப்பது, வைசூரிப் புண் பொருக்குகளிலுள்ள கிருமிகளை மருந்து ஊற்றிக்கொள்வது ஆகியவை முக்கியமானதாகும். ஆனால், அம்மைப்பால் குத்திவைத்துப் பாதுகாப்புத் தேடிக்கொள்வதுதான் மிகச்சிறந்த முறையாகும்; தடுப்பு மருந்துகளிலேயே இதைவிட சுலபமான முறை வேறெதுவும் இல்லையென்றே சொல்லவேண்டும்.

நமது தோலுக்குள் செலுத்தப்படுகிற அம்மைப்பால், அங்கு வந்துசேரக்கூடிய நுண்கிருமிகளை எதிர்த்து அழிக்கத் தயாராக இருக்கிறது. அம்மைப் பால் குத்திவைத்து ஒன்று அல்லது இரண்டுவாரங்களில் தோன்றுகிற பாதுகாப்பு சக்தி சுமார் மூன்று அல்லது ஐந்து ஆண்டுகள் வரையில் நீடித்திருக்கிறது. அம்மைப்பால் சரியானபடி குத்திவைக்கப்படாவிட்டால் மீண்டும் குத்திவைக்கப்பட வேண்டியது அவசியமாகும். சாதாரணமாக மூன்று அல்லது ஐந்து ஆண்டுகளுக்கு ஒரு முறை மீண்டும் அம்மைப்பால் குத்திவைத்துக்கொள்ள வேண்டும்.

வைசூரி நோயை அடியோடு ஒழிக்கவேண்டுமாயின் மக்களெல்லாம் அம்மைப் பால் குத்திவைத்தும், மீண்டும் மீண்டும் குத்திவைத்தும் பாதுகாப்பு சக்தியை ஏற்படுத்திக்கொள்ள வேண்டும். இந்நோய் எளிதில் பரவக்கூடியதாகையால், எந்த இடத்தையும் இத்திட்டத்தில் சேர்க்காமல் விட்டுவிடக்கூடாது, ஒவ்வொருவரும், அடுத்த மூன்று ஆண்டுகளில் பிறக்கிற குழந்தைகளும் குத்திவைத்துக்கொள்ள வேண்டும்.

இத்திட்டத்தை வெற்றிகரமாக நிறைவேற்றுவதற்கு 40 கோடி சொட்டு மருந்து அவசியமாகும்; அதற்குத் தேவையான உற்பத்தி நம்மிடமில்லை. இக்குறையை ஈடுசெய்வதற்காக புதிய உற்பத்தி நிலையங்கள் திறக்கப்பட்டு வருகின்றன; மேலும் பெருமளவுக்கு இறக்குமதி செய்யப்பட்டு வருகிறது.

இந்த இயக்கத்துக்குத் தேவையான சிப்பந்திகளுக்குப் பயிற்சியளிக்கவும் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. அவர்கள் மனப்பூர்வமாகவும் கடமையுணர்ச்சியுடனும் பணியாற்றவேண்டியது மிகவும் அவசியமாகும்.

இத்திட்டம் முற்றிலும் பொதுமக்களின் இயக்கமாகையால் மக்களின் ஒத்துழைப்பின்றி வெற்றிபெறமுடியாது; அவர்கள் முன்கூட்டியே தயாராக இருக்க வேண்டியதும் அவசியமாகும். சில இடங்களில், மக்களுக்கு இதன் நன்மைகளை விளக்கமாகச் சொன்ன பிறகும்கூட 10 சதவிகிதத்தினர் தான் மருந்து குத்திவைத்துக்கொள்வார்கள்.

அம்மைப்பால் குத்திவைத்துக் கொள்ளாமலிருப்பதற்கு முக்கிய காரணம் அவர்களுடைய அறியாமையும், பாராமுகமுமாகும்.

இம்முறையில் நம்மக்களை மூன்று பிரிவுகளாகப் பிரிக்கலாம். (அ) வைசூரி நோயை, கடவுள் தண்டனையாகக் கருதி, அம்மைப்பால் குத்திவைப்பதை ஏற்க மறுப்பது; அவர்களைச் சமாளிப்பதுதான் மிகவும் கடினம். (ஆ) வைசூரியை அம்மை நோயாகக் கருதி அதற்குவேண்டிய பூஜை முதலியவை செய்துகொண்டபோதிலும் அம்மைப்பால் குத்திவைப்பதை எதிர்க்காதவர்கள். (இ) வைதிக முறையைப் பின்பற்றாது, ஒழுங்காக மருந்து குத்திவைத்துக் கொள்கிறவர்கள்.

இவர்களின் எண்ணிக்கை மிகவும் குறைவு. நமது நோக்கம். (அ) பிரிவிலுள்ள மக்களை (ஆ) பிரிவுக்குக் கொண்டுவருவதுதான் அவர்களின் ஆசாரங்களைப் புண்படுத்தாத விதத்தில் மனமாறுதல்களை ஏற்படுத்த வேண்டியிருக்கிறது. சில சந்தர்ப்பங்களில் அவர்கள் மீது சட்டபூர்வ நடவடிக்கையெடுக்க வேண்டியிருக்கும். இது கடைசி நடவடிக்கையாகவே இருக்கவேண்டும்.

இந்நோயின் துன்பம், அனுபவித்தவர்களுக்குத்தான் தெரியும்; சென்ற 50 ஆண்டுகளில் பல லட்சக்கணக்கான மக்கள் இந்நோயினால் மடிந்திருக்கின்றனர்; கோடிக்கணக்கானவர் துன்பமுற்றிருக்கின்றனர். மேலும் இந்நோயினால் கண்கெட்டுப் போவதோடு, உறுப்புக்களும் ஊனமடைந்துவிடுகின்றன.

பெரும்பாலும் சிறுவர்களும் வாலிபர்களுமதான் நோயால் பாதிக்கப்படுகின்றனர். இதற்காக இவ்வளவு நாட்களாகச் செலவு செய்யப்பட்டிருக்கும் பணம், இதை ஒளிப்பதற்குத் தேவையாக இருப்பதைவிட அதிகமாகும்; மேலும் நோயைக் கட்டுப்படுத்துவதற்காகச் செலவு செய்துகொண்டிருந்தால் அதற்கு முடிவு கிடையாது. இந்நோயை அறவே ஒளித்துவிட்டால் இதுவிஷயமாக மேலும் செலவு அதிகம் ஏற்படாது. நமது நாட்டில் வைசூரி நோய் இருப்பது சர்வதேசத்துறையில் நமது அந்தஸ்துக்கு அழகல்ல. நோயை ஒழிப்பதில் வெற்றி பெற்றுவிட்டால் பொது சுகாதாரத் துறையில் சர்வதேச வெற்றி பெற்றதற்கு ஒப்பாகும்.



தொழில் நிர்வாகப்பயிற்சி

## சிறுதொழில் துறையினர் கலந்து கொள்ளலாம்

சென்னை சிறுதொழில்கள் சேவை நிலையம் சிறு தொழிலதிபர்களுக்காக, குறைந்தகால, விஞ்ஞான ரீதியான தொழில் நிர்வாக வகுப்புகளை நடத்தி வருகிறது. இதுவரையில் ஒன்பது வகுப்புகள் நடத்தப்பட்டுள்ளன. பத்தாவது பயிற்சி வகுப்பு 1962, நவம்பர் 1-ந் தேதி தொடங்கும். ஐந்து மாதகாலம் நடைபெறவிருக்கிற இவ்வகுப்புகளில் சிறுதொழில் அதிபர்களும், அவற்றில் நிர்வாக மேற்பார்வைத் துறையிலிருப்பவர்களும் கலந்து கொள்ளலாம். கட்டணமெதுவுமில்லை. ஆங்கிலத்தில் விரிவுரை நிகழ்த்தப்படும். வாரத்தில் நான்கு நாட்களுக்கு வகுப்புகள் நடைபெறும். பயிற்சியில் வெற்றி பெறுகிறவர்களுக்கு அத்தாட்சிப் பத்திரம் வழங்கப்படும்.

## உதயசங்கர் அமெரிக்காவுக்கு விஜயம்

பிரபல இந்திய நாட்டியக்காரர் உதயசங்கர், இருபத்தினான்கு கலைஞர்கள் அடங்கிய அவருடைய நடன கோஷ்டியுடன், அமெரிக்காவில் எட்டுவார காலம் சுற்றுப் பிரயாணம் மேற்கொள்ள புறப்பட்டுச் சென்றுள்ளார். இவா அமெரிக்காவில்பிரபல பொழுதுபோக்கு ஸ்தாபனமொன்றுடன் ஒப்பந்த ஏற்பாட்டின்கீழ் அமெரிக்கா சென்றுள்ளார்.

இந்த நடன கோஷ்டியினர், அமெரிக்காவில் ஸீயாட்டில் நகரத்தில் நடைபெறும் கண்காட்சியில் இந்திய சர்க்கார் சார்பில் ஒரு வாரம் காலம் நிகழ்ச்சிகளை நடத்துவார்கள்.

திரும்பும் வழியில் பல ஐரோப்பிய நாடுகளுக்கு விஜயம் செய்து. அங்கும் பல நிகழ்ச்சிகளை நடத்துவார்களென்றும் எதிர் பார்க்கப்படுகிறது.

# பண்ணைச் செய்தி

## புழுதாக்கா கத்திரி

புழுக்களால் பாதிக்கப்படாத கத்திரியை இப்போது விவசாயிகள் பயிரிட்டு லாபமடையலாம்.

கோயம்புத்தூரில் கறிகாய்வகை ஆராய்ச்சி திட்டத்தில் சில சோதனைகள் நடத்தப்பட்டன. கோ. எச். 158, கோ. எஜ 128, கோ. எச். 129 வகை கத்திரிகளுக்கு அதிகப்புழு வருவதில்லை என்று கண்டறியப்பட்டிருகிறது. இவ்வகைகளுக்கு புழு வருவதில்லை என்பது மட்டுமில்லாமல் மகசூலும் அதிகமாக இருக்கிறது.

டி. டி. டி. 0·1 சதம், அல்லது என்டிரின் 0·02 சதம் மருந்தை நடவு செய்த மூன்று அல்லது நான்கு வாரங்களுக்குப் பிறகு விவசாயிகள் கத்திரிப்பயிருக்கு அடிப்பது நல்லது. சிபாரிசு செய்யப்பட்ட வகைகளைப் பயிரிட்டு மருந்தும் அடித்தால் காய்ப்புழுவை முற்றிலும் ஒழித்து மகசூலை அதிகரித்துக் கொள்ளமுடியும்.

## நாரத்தைவகை மரங்களுக்கு வரும் புழுவை ஒழிக்க வேப்பம பிண்ணுக்கு

ஆந்திரப் பிரதேசத்தில் எலுமிச்சை, நாரத்தை, ஆரஞ்சு மரங்களின் இலைகளை பாதிக்கும் புழுவை கட்டுப்படுத்த வேப்பம் பிண்ணுக்கு கஷாயத்தையும், வேப்பெண்ணெய் எமல்ஷனையும் பயன்படுத்தி பலன் அடைந்திருக்கிறார்கள்.

நாற்றங்காலில் இளம் பருவமுள்ள மரங்களையே முக்கியமாக இந்தப் பூச்சி தாக்கும். இலைகள் சுருட்டிக் கொண்டு வாடி விழுந்துவிடும். ஒரு காலன் தண்ணீரில் மேகூறப்பட்ட மருந்துகளில் ஒன்றை 4 அவுன்ஸ் கலந்து பதினைந்து நாட்களுக்கு ஒருமுறையாக இரண்டு தடவைகள் அடிப்பதால் பெருமளவுக்கு பூச்சி கட்டுப்படும். பிண்ணுக்கு கஷயம் ஒரு மரத்துக்கு இரண்டு தடவைகள் அடிக்கச் செலவு 0 30 புதுகாசு ஆகும். எண்ணை எமல்ஷனைப் பயன்படுத்தினால் 0·50 புதுக்காசு ஆகும்.

# சந்தையில்போய் சரக்குவாங்கும் தொல்லையில்லை

## இருந்த இடத்திலிருந்தே கட்டளையிட்டால் இயந்திர கதியில் எதுவும் கிடைக்கும் வித்தை

### மேலைநாடுகளில் வர்த்தகத்துறையில் நடைபெறும் சில புதிய உத்திகள்

பாரத நாட்டின் பெரிய நகரங்களில் சில சுகவாசிகள் இருக்கிறார்கள்: அவர்களுக்குக் கடையிலிருந்து ஏதாவது சாமான் வேண்டுமென்றால் டெலிபோனை எடுத்து கடைக்கு போன் செய்து சொல்லிவிடுவார்கள். சாமான்கள் அலறியடித்துக் கொண்டு வந்துவிடும். ஆனால், அமெரிக்காவிலிருப்பது போன்ற நவீனமான தபால்-ஆர்டர் விற்பனை நிலையம் பாரத நாட்டில் ஏற்படுவதற்கு இன்னும் எத்தனை ஆண்டுகள் ஆகுமோ! அமெரிக்காவிலோ இந்த தபால் ஆர்டர் விற்பனை நிலையம் கூட விஞ்ஞானப் புரட்சி ஒன்றிற்கு இலக்காகிக் கொண்டிருக்கிறது; இப்போது அது ஒரு மந்திர மார்க்கெட் டாக மாறிக் கொண்டிருக்கிறது

சாமான்களின் பட்டியல் ஒன்றைப் பார்த்து, நமக்கு வேண்டியவற்றை தபால் மூலம் தெரிவித்து வாங்கிக் கொள்ளக்கூடிய இந்த தபால் ஆர்டர் விற்பனை நிலையம் அமெரிக்காவில்தான் முதல் முதலாகத் தோன்றியது. அமெரிக்காவைப் பார்த்துத்தான் மற்ற நாடுகள் இந்த மாதிரி நிலையங்களை அமைத்துக் கொண்டன. மேற்கு ஜெர்மனியில் இந்த வகை விற்பனை நிலையங்களின் எண்ணிக்கை சமீப காலத்தில் வெகுவாக அதிகரித்து விட்டது. ஆனால் ஆட்கள் போதாமையாலும், வேறு காரணங்களாலும் ஜெர்மன் நிலையங்களில் பெரும்பாலான அமெரிக்கக் கம்பெனிகளை விட மிக அதிக அளவில் யந்திரங்கள் உபயோகிக்கப்படுகின்றன

பண்டங்களின் போக்குவரத்து இடைவிடாமல் பெருகி வருவதால் அதைச் சமாளிக்கும் பொருட்டு, மிக நவீன முறையில் சாதன வசதி கொண்ட புதிய கட்டிடங்களைக் கட்டியிருக்கிறார்கள். புதிய உத்திகள் வகுக்கப்பட்டிருக்கின்றன. பல துறைகளில் எவ்வளவோ முற்போக்கான உத்திகளைக் கண்டுபிடித்த பெருமை இந்தத் தபால் ஆர்டர் கம்பெனிகளையே சாரும் என்று ஹாம்பர்க் நகரத்து நிபுணர் ஒருவர் சொல்லுகிறார்.

**ஒரு நாளுக்கு 25,000 பார்சல்கள்**

வாடிக்கைக்காரர்கள் தபாலில் பண்டங்களுக்கு ஆர்டர் அனுப்புகிறார்கள்; கொஞ்ச காலமாக டெலிபோனில் சாமான் பட்டியலைச் சொல்லி விடுவதும் வழக்கமாயிருக்கிறது. ஆர்டர் வந்தால் உடனே அதை கவனித்து வாடிக்கைக்காரர்களுக்கு பண்டங்கள் கிடைக்கச் செய்ய வேண்டும் என்பது இந்தக் கம்பெனிகளின் அடிப்படையான சட்டம். பெரிய ஜெர்மன் தபால் ஆர்டர் கம்பெனி எதுவும் ஒரு நாளுக்கு 25,000 பார்சல்கள் அனுப்பத் திறன் பெற்றதாயிருக்க வேண்டும்; கிருஸ்துமஸ் மாதிரியான பண்டிகைகளில் இது இரட்டிப்பாகக்கூடும். இந்நிலையில், தானியங்கிக் கருவிகளைக் கொண்டு வேலையை முடிப்பதென்பது ஒரு கட்டாயத் தேவையாகிவிடுகிறது. முதலில், கம்பெனிக்கு வரும் பண்டங்களை ஒரு குறிப்பிட்ட முறையில் அடுக்கி வைத்தாக வேண்டும்; அப்படி வைத்தால்தான், தானியங்கி யந்திரங்கள் அந்தப் பண்டங்களை எளிதாக எட்ட முடியும். சாதாரணமாக அந்தப் பண்டங்களெல்லாம் பெரிய பெரிய தொகுதிகளாகக் கம்பெனிக்கு வருகின்றன. அவற்றை அதற்கு உரிய இடத்தில்தான் அடுக்கி வைக்க வேண்டும்.

தரைக்கடியில் சங்கிலி வைத்து, பெரிய பலகைகள் மூலம் அவை அந்தந்த இடங்களில் கொண்டு சேர்க்கப்படுகின்றன. அந்தப் பலகை வண்டிகளை எலெக்ட்ரானிக் கருவிகள் இயக்குகின்றன. சில சமயம் அந்த வண்டிகள் தாமாகவே செல்லக்கூடியனவாகவும் இருக்கும்; அப்போது மின்சாரத்தின் மூலம் அவை குறிப்பிட்ட திசைகளில் செலுத்தப்படுகின்றன. ஒவ்வொரு பண்டத்துக்கும் என ஒரு குறிப்பிட்ட பிரிவு இருக்கும்; அதில் கொண்டுபோய் பண்டத்தை அடுக்குவது அந்த வண்டியின் வேலை.

பல மாடிகள் உள்ள கட்டிடங்களாயிருந்தால் என்ன செய்வது? அதற்கும், சுருள் பாதையில் மேலேற்றக் கூடிய கன்வேயர்கள் வைத்திருக்கிறார்கள். அவற்றில், பண்டங்களைக் காலி செய்துவிடக்கூடிய தானியங்கக் கருவிகள் பொருத்தப்பட்டிருக்கின்றன. அந்தக் கன்வேயர்கள் ஒரு சிப்பந்தியின் மேஜைப் பக்கமாகப் போகின்றன; அப்படிப் போகும் போது அந்தச் சிப்பந்தி பரிபாஷை மூலம் ஒரு டைப் மெஷினில் உரிய கட்டங்களைப் பதிவு செய்து கொடுக்கிறார். அந்தக் கன்வேயர்களின் 'எலெக்ட்ரானிக் நினைவி'ல் இந்த விவரம் பதிவாகிறது. பல்வேறு பிரிவுகளையும் அந்தக் கன்வேயர்கள் கடந்து செல்லும் போது, அந்தப் பிரிவுகள் தயக்கமில்லை தக்கயல் என்று கேட்கின்றன; எந்தப் பிரிவிலாவது கேள்விக் கேற்ற பதில் கிடைத்தால் உடனே கன்வேயரிலிருந்து அந்தப் பிரிவுக்குள் சாமான்கள் தாமாகவே இறங்கிவிடுகின்றன.

ஆர்டரில் உள்ள சாமான்களைத் தானியங்கிக் கருவிகள் மூலமே தெரிந்தெடுத்துச் சேகரிப்பது இன்னமும் ஒரு பெரிய பிரச்னையாகத் தான் இருக்கிறது. வாடிக்கைக்காரர் ஒருவர், ஒரு குளிர்ப்பதன் பெட்டியும், இரண்டு ஜோடி ஸ்டாக்கிங்குகளும், மூன்று சாராய பாட்டில்களும், நாலு சோப்புக் கட்டிகளும் வேண்டும் என ஆர்டர் கொடுக்கலாம். இதைவிடக்கூட விநோதமான கலப்புப் பட்டியல்கள் வருவதுண்டு.

இந்தப் பண்டங்களைப் பொறுக்கி எடுத்துச் சேரிப்பதற்கு தானியங்கி யந்திரங்களை முழு அளவில் இன்னமும் கொண்டுவர முடியாமலே இருக்கிறது. ஆயினும் இதற்கு முயற்சி செய்யப்படுகிறது. இப்போது ஓரளவுக்கு தானியங்கிக் கருவிகளே உபயோகிக்கப்படுகின்றன. சுருள் பாதையில் நகரும் கன்வேயர் கருவி ஒன்று ஒவ்வொரு பிரிவாகச் செல்லும்; அந்தந்தப் பிரிவில உள்ளவர்கள் கையால் சாமான்களை எடுத்து அதில் வைத்து. அடுத்தபடியாக எங்கே செல்ல வேண்டும் என்பதை, சில பித்தான்களை அழுத்துவதன் மூலம் கன்வேயருக்குத் தெரிவிக்கிறார்கள். இந்த மாதிரி எல்லா சாமான்களையும் சேகரித்த பின், அந்தக் கன்வேயர் பார்சல் கட்டும் பிரிவல் கொண்டு போய் அந்தப் பண்டங்களைச் சேர்க்கிறது.

எஞ்சினீயர்கள் இதைவிடச் சிறப்பான முறை ஒன்றை வகுத்து வருகிறார்கள். பில்போடும் போது, துளையுள்ள கார்ட் ஒன்று தானாகவே தயாராகிவிடுகிறது. அந்தக் கார்ட், கன்வேயரின் செலுத்தும் கருவி ஒன்றில் பளிச் சென்று இணைந்துவிடும். பிறகு அதுதான் வழிகாட்டியாக வேலை செய்கிறது.

இதனால் கன்வேயர்கள், தாமாகவே பல்வேறு பிரிவுகளுக்கும் நகருகின்றன. கார்டுக்கும், கன்ட்ரோல் கருவிக்கு மிடையேயான தொடர்பு, ஃபோட்டோ மின்சார முறையில் அமைக்கப்படுகிறது. ஆர்டர் பூர்த்தியானவுடன் கன்வேயர், பார்சல் கட்டும் பிரிவிடம் கொண்டுபோய் அவற்றைப் போட்டுவிடுகிறது.

இனிமேல் புதிய முன்னேற்றம் ஒன்று வரும்: அதன்படி, ஒரு கன்வேயரோ, வண்டியோ தானாகவே அலமாரிகளுக்குச் சென்று, வேண்டிய சாமான்களை எடுத்து, அவற்றை ஒரே பெட்டியில் 'புத்திசாலித்தனமாக' அடுக்கும்.

இதையும் துளைபோட்ட காட்டுகள் மூலம், 'ஃபோட்டோ மின்சார முறையில் சாதிப்பார்கள். இருந்தாலும், தானியங்கி முறையை இதில் முழு அளவில் கொண்டு வர வேண்டுமானால் அதற்கு இரண்டு அம்சங்கள் தேவை: முதலாவதாக, பண்டங்களைப் பார்சல் கட்டும் போது அந்தப் பார்சல் உறுதியாயிருக்கவேண்டும்; இரண்டாவதாக, கன்வேயரோ, வண்டியோ செல்ல வேண்டிய இலக்குகள் கொஞ்சமாகத்தான் இருக்க வேண்டும். மேலும், பார்சல்களின் அளவு ஒரு தரப்பட்டதாயிருக்க வேண்டும்.

அடிக்கடி கோரப்படும் பண்டங்களை, தானியங்கிக் கருவிகள் சுலபமாய் எட்டக் கூடிய இலக்குகளில் வைத்துவிடலாம். ஆனால் அரிதாகக் கோரப்படும் பண்டங்களைக் கம்பெனி ஆட்களே எடுத்து, மற்ற பண்டங்களோடு அடுக்கியாக வேண்டும்.

பெட்டிகள் ஏற்றிய வண்டியும் ஓரளவுக்குத் தானியங்கிதான். பார்ஸல் கட்டும் பெண்கள் வரிசையாக உட்கார்ந்திருப்பார்கள்; அந்த வண்டி அவர்களைக் கடத்து நகரும். பண்டங்கள் நிறைந்த பெட்டிகளை ஒவ்வொருவராக இறக்கி வைத்து, அந்தப் பண்டங்களை தரப்படியான காலிப் பெட்டிகளில் அடுக்குகிறார்கள். அந்தக் காலிப் பெட்டிகளையும் ஒரு தானியங்கிக் கன்வேயர்தான் கொண்டு வருகிறது. பெண்கள்தான் பண்டங்களை சரிபார்க்க வேண்டும். தபாலில் அனுப்புவதற்கு பார்சல்கள் ஆயத்தமானவுடன், இன்னும் ஒரு கன்வேயர் அவற்றை ஏற்றிக் கொண்டு, கம்பெனிக்குள்ளேயே இதற்கென இருக்கும் தபால் நிலையத்தில் சேர்க்கிறது.

எல்லாம் சரசரவென்று நடந்தேறுகிறது. எங்கேயும் தாமதம் கிடையாது. இந்த முறைக்கு ஆதரவு வலுத்து வருவதற்குக் கேட்பானேன்?

★

# காப்பாற்றத் தக்க கால்நடைச் செல்வங்கள்

## போற்றி வளர்த்துப் பயன்மிகப் பெறவும் பக்குவமான வழிமுறை பலவாம்

## கால்நடைக் கொட்டில், தீவனம், வளர்ப்பு இவை பற்றிய ஆராய்ச்சிச் செய்திகள்



"ஆடுமாடு இல்லாதவன் அடை மழைக்கு ராஜா" என்று தமிழ் நாட்டில் ஒரு சொல் வழங்குகிறது. ஆடு மாடு வைத்துக் கொண்டவர்கள் யார் வாயிலிருந்தோ இந்தச் சொல் பிறந்திருக்க வேண்டும். மழைக்காலத்தில் சரியானபடி பேணப் பெறாத கால்நடைகள் எளிதில் நோய் நொடிகளுக்கு இலக்காகிப் பெரிய அளவில் இறந்து விடக்கூடும். அப்படிச் சேதமுறாமல் காக்க வகை தெரியாதவரைத் தவிர வேறு யார் இப்படித் தலைகீழான பழமொழியை உண்டாக்கியிருக்க முடியும். ஆடுமாடு இல்லாதவர்கள் அடை மழைக்குத்தான் ராஜாவாக இருக்கலாம். ஆடுமாடு உள்ளவர்கள் அதைச் சரிவரப் பேணமட்டும் கற்றுக் கொண்டால் எப்போதுமே ராஜாவாக இருக்கலாம்.

### செல்வத்தைப் பேணுதல்

செல்வம் யாதாயிருந்தாலும் போற்றி வைத்திருந்தால்தான் அது அழியாமல் இருக்கும். கால்நடைச் செல்வமும் இந்த விதிக்கு விலக்கல்ல. அவற்றைச் செவ்வையாகப் பேணினால் அவை அழியாததோடு பெருஞ் செல்வமாக வளரவும் செய்யும். ஒழுங்கான கால்நடைக் கொட்டம், போஷாக்கான உணவு, நோய்கள் பீடிக்காதிருப்பதற்கான நடவடிக்கைகள் இவைகளில் கருத்துச் செலுத்தினால் கால்நடைகளை எந்த நாளும் சேதமின்றிக் காக்கலாம்.

### கால்நடைக் கொட்டில்

இந்தியாவில் கிராமங்களிலும் நகரங்களிலும் கால்நடை வளர்ப்பவர்கள் அவற்றிற்கு முறையான கொட்டில்களை அமைத்துக் கொடுப்பதில்லை. பகலில் கால்நடைகள் வெட்டவெளிகளில் மேய்ந்து கொண்டோ தெருக்களில் சுற்றிக்கொண்டோ நேரத்தைக் கழிக்கின்றன. இரவில் வீட்டின் ஒரு மூலையில் முடங்கிக் கிடக்கின்றன அல்லது ஓடிப் போகாதிருக்க ஏதாவது மரத்திலோ தாழ்வாரங்களிலோ கட்டப்பட்டு ஒடுங்கி நிற்கின்றன. இன்னும் சில தருணங்களில் அவைகள் சாலைகளிலும் தெரு ஓரங்களிலும் படுத்துக் கொள்ளும்படி விட்டுவிடப்படுகின்றன.

பருவ காலங்களின் கொடுமைகளினின்றும் துஷ்ட மிருகங்களினின்றும் கால்நடைகளைக் காப்பாற்ற ஒழுங்கான கொட்டில்கள் வேண்டும். அதற்கு மேல் விரிவான ஏற்பாடுகளுள்ள கொட்டில்களொன்றும் இந்தியச் சூழ்நிலையில் தேவையில்லை. இப்படிப்பட்ட கொட்டில்களைக் கூட அமைக்க முடியாதவர்கள் இதமான சீதோஷ்ண நிலையுள்ள இடங்களில் மர நிழலிலாவது ஆடு மாடுகளை ஒதுங்கும்படி செய்யலாம். கொட்டில்களில் நல்ல காற்றோட்டமும் போதுமான இடவசதியும் வெளிச்சமும் உடையதாக இருக்க வேண்டும். அதில் சிறு நீர் தரையில் விழுந்ததும் வெளியேறுவதற்கான தூம்பு வசதியும் செய்ய வேண்டும். கால்நடைகள் ஒன்றுக்கொன்று முட்டிச் சண்டை போட்டுக்கொள்ள முடியாத தூரத்தில் கட்டப்படவேண்டும். தீனிக்கூடை தரை மட்டத்திலிருந்து சிறிது உயரத்திலிருந்தால் நல்லது. கட்டிடக் கொட்டில்களானால் தலைக்கு மேல் தீவனச் சேமிப்புக்கான பரண்களையும் அமைக்கலாம். ஒரே மாதிரியானத் தீனியைத் தினமும் வைக்காமல் சிறு சிறு மாற்றங்கள் செய்ய வேண்டும். தழைகளைத் தீனியாகக் கொடுத்தால் அதில் நஞ்சுச் செடிகளோ இலைகளோ தப்பித் தவறிக் கலந்துவிடாமலிருக்கும்படி பார்த்துக்கொடுக்க வேண்டும். கால்நடைகள் வீணாக்குகின்ற தீனிகளை மீண்டும் கொடுக்க நேர்ந்தால் சுத்தப்படுத்திய பின்புதான் கொடுக்க வேண்டும்.

காலவரையறை வைத்துக் கொண்டு உணவு கொடுப்பதும் நல்லது. அப்படிச் செய்வதால் கால்நடைகளுக்குச் சீராகப் பசி உண்டாகி, தீவனத்தைச் சாப்பிடும் பழக்கம் உண்டாகும். உடல் வளர்ச்சிக்குத் தேவையான பொருள்களையும் பால் உற்பத்திக்கு உதவும் பொருள்களையும் ஆராய்ந்து தீவனமாக் கொடுப்பது இன்றியமையாத தேவையாகும்.

கொத்துக்கடலை, அரிசித் தவிடு, கோதுமைத் தவிடு, உளுத்தந் தவிடு, பருத்திக் கொட்டை, பிண்ணாக்கு இப்படிப் பல பொருள்களையும் கலவைத் தீனியாகக் கொடுப்பதுண்டு. பாலுக்காக ஆடுமாடு வளர்ப்பவர்கள் பால் கறக்கும் காலத்தில் மட்டும் வீட்டில் கட்டித் தீனி போட்டுப் பால் வற்றியவுடன் அவற்றை வெளியே விரட்டிச் சரியான தீவனம் கொடுக்காமல் விட்டு விடுகிறார்கள். இது நாளடைவில் பேரிழப்பை யுண்டாக்கக் கூடிய நன்றி மறந்த செயலாகும்.

### நோய்த் தடுப்பு

கால்நடைகளுக்குப் பல விதமான தொத்து நோய்களும், சாதாரணமான நோய்களும் வருகின்றன. இந்த நோய்கள் எல்லாவற்றாலும் கால்நடைகள் சாவதில்லை. ஆடு முதலானவற்றுக்கு நோய் வந்து இறந்தால் அதனால் வரும் நஷ்டம் பெரிதாய்த் தெரிவதில்லை. இந்தக் காரணங்களால் கால்நடை வளர்ப்பவர்கள் சாதாரணமாகக் கால்நடைகளுக்கு நோய் வந்தால் ஆரம்பத்தில் ஒன்றும் கவனிக்காமலேயே விட்டு விடுகிறார்கள். ஏதாவது கடுமையாக அது தோன்றிய பின்புதான் அவர்களுக்கு அதைப் பற்றிய சிந்தனை பிறக்கிறது. சிறு காயம் பட்டால் கூட உடனே அதைக் கவனித்து ஏதாவது செய்வது என்று எல்லோரும் மனங்கொண்டால் நம் நாட்டில் லட்சக் கணக்கான கால்நடைகள் திடீர் மரணம் அடைவதைத் தடுத்து விடலாம். இதற்குக் கால்நடை வளர்ப்பவர்கள் அவற்றிற்கு வரும் நோய்கள், நோயின் அறிகுறிகள், தடுப்பு முறைகள் முதலியன பற்றி ஓரளவு தெரிந்து வைத்திருக்க வேண்டும். இயலும் தருணங்களில் எல்லா விஷயந் தெரிந்தவர்களைக் கலந்தாலோசித்தும் கால்நடை மருத்துவ மனைகளிற் சென்றும் கால்நடைகளுக்குச் சிகிச்சை செய்யவேண்டும்.

பிராணிகள் உடல் நலம் குன்றியிருக்கும் காலத்தில் எளிதில் ஜீரணிக்கக் கூடிய தீவனங்களையே அவற்றிற்குக் கொடுக்க வேண்டும். அதிகமாக வேலை கொடுக்கக் கூடாது. தொத்துநோய் கண்டால் தனியிடத்தில் நோயுற்ற பிராணிகளைப் பிரித்துக் கட்டி வைக்க வேண்டும்.

### கன்றுகளின் பராமரிப்பு

கால்நடைகளைச் சிறு கன்றுகளாயிருக்கும் காலத்திலிருந்தே நல்ல முறையில் பராமரித்தால் அவை திடமாக வளரும். பலர் சிறு கன்றுகள் வளர்ப்பதில் என்ன கவனம் தேவையிருக்கிறதென்று நினைக்கக்கூடும். பிறந்த குட்டிகளை ஆரம்பத்தில் அவற்றின் இச்சைப்படி திரிய விட்டு விட வேண்டும். கல், மண் இவற்றை நக்கித் தின்ன விடாமல் பார்த்துக் கொள்ளவேண்டும். பிறந்து சில மணி நேரங்கள் வரை குட்டிகளுக்கு ஆகாரம் தேவையில்லை. இவைகள் திடமாக இருக்குமானால் தாயாகவே தாய்மடியைத் தேடிச் சென்றுபால் அருந்தும். அப்படி முடியாத தருணங்களில் குட்டிகளை வளர்ப்பவர்கள் தாயின் அருகில் கொண்டு சென்று ஊட்டுக்கு விடலாம்.

தாய் மடியில் சுரந்துள்ள பாலைக் கையினால் கொஞ்சம் வெளியில் பீச்சி விட்ட பிறகு குட்டிகளைப் பால் குடிக்கச் செய்வதும் நல்லது. ஆடு முதலான கால்நடைகள் இரண்டு மூன்று குட்டிபோடுவதுண்டு. அப்படி இரண்டு மூன்று குட்டிகளுக்குப் பாலூட்டுவதானால் மிகச் சிறிய குட்டிக்கு முதலில் ஊட்ட வேண்டும். பால் காம்புகளைப் பற்றிக் கொள்ளக் குட்டிகளுக்கு முடியாவிடில் நாமே உதவி செய்து பால் குடிக்க வைக்கலாம். குட்டிகளையெல்லாம் காற்றோட்டமுள்ள இடத்தில் நிழலில் தங்க வைக்க வேண்டும்.

### இனப்பெருக்கம்

கால்நடைகள் வளர்ப்பில் முக்கிய அம்சம் இனப்பெருக்கத்திற்கு ஏற்ற உதவி புரிவதுதான். நம் நாட்டில் நமது எல்லா வித தேவைகளுக்கும் போதிய அளவு கால்நடைகள் இல்லை. பாலுக்காகவும், இறைச்சிக்காகவும், விவசாய வேலைகளுக்காகவும் நாம் கால்நடைகளை வளர்க்கிறோம். எனவே இந்தியாவில் கால்நடைப் பற்றாக்குறையை நீக்க நல்ல ஜாதிக் கால்நடைகள் நிறைய உற்பத்தியாவதற்கான ஏற்பாடுகளைச் செய்ய வேண்டும். இந்த இனப்பெருக்க வேலையில் உயர்ந்த ஜாதிக் காளைகளைக் குறிப்பிட்ட காலங்களில் கூட்டு வாழ்வுக்கு ஏற்பாடு செய்தல் பெண் இனங்கள் கருவுற்ற பின் பராமரித்தல் முதலியவைகளில் சில ஒழுங்குகளைக் கடைப்பிடிக்க வேண்டும்.

இனப்பெருக்க வேலை சமதமாக இந்திய விவசாய ஆராய்ச்சிக் கழகம் பல ஆராய்ச்சிகளைச் செய்து சிறந்த பல உண்மைகளைக் கண்டிருக்கிறது. விரிவான விவரங்கள் வேண்டுவோர் அரசாங்கக் கால்நடை இலாகா அதிகாரிகளிடமும் இவற்றைக் கேட்டு தெரிந்து கொள்ளலாம். கால்நடை வளர்க்க விரும்புவோர் இனப்பெருக்கம், கன்றுகள் பராமரிப்பு, கால்நடைகளுக்கான கொட்டில், தீவனம், நோய்த்தடுப்பு ஆகியவை பற்றி இன்னும் பல உண்மைகளையும் அந்த அதிகாரிகளிடம் கேட்டுத் தெரிந்து கடைப்பிடித்து நலம் பெறலாம்.



---

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

காணச், செயலாற்ற இவருக்கு வாய்ப்புக் கிட்டியது. நிர்வாகத்துறையில் லஞ்சப் பேய் ஒழிக்கப்பட்டு, திறனும் உயர்த்தப்பட்டு, பம்பாய் மாநிலம் இதர மாநிலங்களுக்கு பற்றத்தக்க அளவுக்கு ஒரு உதாரணமாகத் திகழ்ந்தது. இவர் ஒரு பக்ஷபாதம் காட்டாத உள்ளத்தைப் படைத்தவர். குஜராத்தியராக இருந்த பொழுதிலும் இவர் அகமதாபாத்தில் ஒரு நாள் கலவரம் செய்த குஜராத்தியக்கூட்டம் ஒன்றின் மீது துப்பாக்கிப் பிரயோகம் செய்யக் கட்டளை விடுத்தார். பம்பாய் நகரம் மொழி வாரி மாகாணப் பிரிவினை இயக்கத்தில் மகாராஷ்டிரா, குஜராத் என்று இரண்டாக்கப்பட்டது இவருக்கு மிகுந்த ஏமாற்றத்தை விளைவித்தது.

இவருடைய திறமையின் பயனை நாடு அனைத்தும் பெற வாய்ப்புக்கொடுக்க இந்தியப் பிரதமர் நேரு மத்திய அமைச்சர் அவையில் தொழில் வர்த்தகத் துறை இலாகாவை இவரிடம் அளித்தார். 1958-ல் இவர் நிதி இலாகா நிர்வாகப் பொறுப்பை ஏற்றார். இப்பதவியில் இவருக்கு முன் இருந்த நால்வர் சொற்ப காலத்தில் பதவியை விட்டகன்றிருந்த போதிலும் தேசாய் இன்றும் அதில் நிரந்தரமாகப் பணியாற்றுகிறார். இது இவருடைய திறமைக்கு ஓர் எடுத்துக் காட்டு.

தன்னுடைய பழக்க வழக்கங்களிலும், கொள்கையிலும் தேசாய் நூற்றுக்குநூறு மடங்கு காந்தி வழியைப் பின்பற்றுபவர். இவர் புலால் உண்ண மாட்டார். வாரந்தோறும் 36 மணி நேரம் உபவாசம் இருப்பார். தண்ணீர் ஒன்றைத் தவிர வேறு ஒரு பானமும் உட்கொள்ள மாட்டார். தனது சவரத்தைத் தாமே செய்து கொள்பவர்! இயற்கை முறை சிகிச்சையில் இவருக்கு அளவற்ற பிரமை யுண்டு.

பிரதமர் நேருவின் வாரிசு யார் என்ற கேள்விக்கு இன்னும் பதில் கிட்டவில்லை. இப்பொழுது மத்தி அமைச்சர் அவையில் தேசாய் நேருவுக்கு அடுத்தபடியான அந்தஸ்தைப் பெற்றிருக்கிறார். பிற்காலத்தில், இந்தப் பிரச்னை எழும் பொழுது தேசாயின் தகுதி எளிதாகப் புறக்கணிக்கப்பட மாட்டாது என்று அனுமானிக்கப்படுகிறது. ஃ

---



---

Edited & Published by its owner Sri Triloka Sitaram and Printed by him at his Shivaji Newsprinters, 24, A-Theradi Bazaar, Tiruchy-2.
Single copy six nP ANNUAL SUBSCRIPTION INCLUDING 4 SPECIAL NUMBERS: For INDIVIDUALS Rs. 5. For INSTITUTIONS Rs. 10